69

**"EDUCATION IS AT BEST ONLY A PROCESS OF DEVELOPING WHAT HEREDITY HAS IMPLANTED IN THE MIND."**

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




*அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.]* [God is Love : Knowledge is Power : *Aum*

**'New Series"** ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.** **"Approved"**

புத்தகம். **23.]** ராக்ஷஸ ஹு ஆனிமீ, **1915** ஹு ஜூன்மீ [சஞ்சிகை **3.**

# THE VIVEKA CHINTAMANI.

THE VIVEKACHINTAMANI.—This well-known journal has now entered on the 23rd year of its publication and the first number of the new volume enunciates the basic principle underlying the work of the Editor and his co-adjutors all these years, which is : "God helps those who help themselves." Dr. Duncan, who had intimately watched the work of the Editor, on his retirement, wrote to him to say : "Very few of your countrymen have taken up this question of religion and education with the conviction and fervour that you manifest."—The "Hindu," 12th June, 1915.

"The May number of this excellent Tamil Magazine deals with the Problem of Child Education and gives the new Educational Minister's views on the same. The other articles of interest are those on the new Minister of Education, Srimati Swarnakumari Devi (Mrs. Ghosal), the Pass of Thermopylæ, Proverbs as Aids to Child-Study, and a brief sketch of the History of India in verse suitable for school children to recite. There is also an article on the Excellence of Temple Worship, which is one of Auvaiyar's Sayings. The short story for the month deals with the evils of early marriage. We are glad to find the magazine is being well appreciated in educational circles."—*Ibid.* Among the numerous official opinions expressed on the merits of the magazine, the following by the Inspectress of Girls' Schools is typical of what others have said or are saying:—"The Inspectress considers the magazine, which has been converted into a school journal, suitable for use in all the Tamil Elementary Schools for girls, both under public and private management, and therefore requests that the (Inspecting) officers (of the circle) will be good enough to address the Presidents of Taluq Boards, the Chairmen of Municipal Councils and the correspondents of Aided Girls' Schools in their respective ranges to subscribe for copies of the journal and to see that every Tamil School in the circle is provided with one copy at least." The subscription to the journal is Rs. 4 for popular Edition and Rs. 5 for the School Edition on thick paper. The address of the journal is: "Lalitalaya, 19, Adam Street, Mylapore, Madras."

## RACE CULTURE AND INDIVIDUAL CULTURE, OR EUGENICS AND EDUCATION.

"Eugenics is the science of race culture and advocates the practical application of the laws of heredity to the improvement of mankind, tending to the realisation of the greatest comfort. The social artifices like Sanitation, Education and other institutions endeavour to help the individual to develop the best in him by creating a suitable atmosphere......................

"A facetious critic has characterised our educational system as a process of cram and emetic ; and considering the extremely mechanical form in which it is moulded, we have to regard that the comparison is by no means inappropriate. It is almost an admitted fact that education so far has failed to fulfil the high purpose at which it aims, *viz.*, the all-round efficiency of the race ; and the failure is not to be attributed to any one cause in particular. An ideal scheme of education would regard with equal importance the qualifications of the teacher, the principles of methods, the suitability of subjects, and above all the character of the "stuff" on which these operate. We had pinned too much faith in the past to the transmuting or creative powers of these agencies, ignoring the fact that *education is at best only a process of developing what heredity has implanted in the mind*, but is utterly incapable of drawing out what is not already there, even in spite of honest endeavours...............

" ...In the bringing up of a child, two factors count, *viz.*, the mental heritage and the circumstances of environment; and in appraising their relative importance, we incline in favour of the former. No matter how high the potential of any one of these factors, the result is nothing if the other factor is also nothing. The deeper we recognise the correctness of this view, the nearer we come to the solution of the problem, *viz.*, the interpretation of the educational ideas in the language of heredity.'—*Vide* for particulars *Sir Francis Galton's* book "Inheritance of Human Faculty."—*From the Educational Review.*

## THE EXTENSION OF LORD HARDINGE'S VICEROYALTY.

ANNOUNCEMENT BY H. E. LORD HARDINGE.

H. E. THE VICEROY'S MESSAGE.

*Simla*, *June* 1914.—"The Secretary of State has asked me to give publicity to the following announcement made yesterday afternoon by the Prime Minister in the House of Commons :—'Under normal circumstances Lord Hardinge of Penshurst's term of office as Viceroy and Governor-General of India would have terminated in November next, but His Majesty's Government recognising the great services which Lord Hardinge has rendered India and desiring to retain the advantage of his experience during the coming winter have requested him to remain until the end of March next. Lord Hardinge has readily consented to comply with our wishes and the King has been pleased to approve the arrangement. I am glad of the opportunity to express my sense of the public spirit which in spite of great strain of his labours and in face of heavy private sorrows has led Lord Hardinge to place his services unreservedly at our disposal."

While fuffilling the wishes of the Secretary of State in making public this announcement, I desire to say that while in the critical times through which the Empire is passing I feel that it is my bounden duty to fall in with the wishes of His Majesty's Government whatever they may be, it is with no light heart that I have agreed to this prolongation of the onerous responsibilities that fall to a Viceroy's lot but I do not forget that many of the Ruling Chiefs of India and many bodies representative of various communities and interests have given expression to a wish that the tenure of my office should be extended and the feeling that I have the friendly confidence of so many gives me courage to continue to fulfil my duties to the best of my ability and for the welfare of India and her people."

புஸ்தகம்-23.] [சஞ்சிகை-3.
"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."
ராக்ஷஸஹு ஆனிமீ
# விவேக சிந்தாமணி
June-July 1915.
ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழுவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மேனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னேஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## அரசர் பிரதிநிதி லார்ட் ஹார்டிஞ்சவர்கள்.

ஜூன்மீ 12உ சாயங்திரம் பிரதான மந்திரி மிஸ்டர் ஆஸ்க்வித் அவர்கள் பார்லிமெந்து காமன்ஸ் மஹாசபையில் கனம் பொருந்திய லார்ட் ஹார்டிஞ்சவர்களுடைய உத்தியோக நியமனகாலம் அடுத்த நவம்பர்மாசத்திலிருந்து மார்ச்சுமாசம் முடிவுவரையில் ஒத்திவைக்கப் பட்டிருக்கிறதாகவும் அவர் மந்திராலோசனை சபையார் வேண்டுகோளுக்கிணங்கி இன்னும் 5-மாசகாலம் தம்முடைய சொந்த சௌகரியத்தை கவனிக்காமல் பொதுஜன க்ஷேமத்தைக் கருதி இந்தியாவில் நீடித்திருக்கச் சம்மதித்திருப்பதற்காக மந்திரிகளெல்லாரும் அவருக்குக் கடமைப்பட்டிருக்கிறார்களென்றும் அவருடைய பொதுநலப் பிரியத்தை ஸ்தோத்தரித்து அறிக்கை செய்தார். அந்த சமாசாரத்தை இந்தியா மந்திரியாகிய கனம் மிஸ்டர் ஆஸ்டின் சாம்பர்லேன் அவர்கள் அரசர் பிரதிநிதிக்குத் தந்திமூலமா யனுப்பி அது விவரத்தை இந்தியா மஹாஜனங்களுக்குத் தெரிவிக்கும்படி கேட்டுக்கொண்டபடி கனம் லார்ட் ஹார்டிஞ்சவர்களும் அச்சமாசாரத்தைத் தெரிவித்து குறித்த 5-வருஷ கெடுவுக்குமேல் இன்னும் 5-மாசம் இருப்பது தனக்கு சொந்தத்தில் கஷ்டமாக விருப்பினும் பொதுஜனங்கள் எங்கும் கூட்டம் கூடி அவருடைய ஆளுகை 5-வருஷத்துக்குமேல் நீடித்திருக்கச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டதால் அவர்களுடைய நம்பிக்கையிருக்கிற வரையில் தாம் பொது நலத்தை நாடிச் செய்ய வேண்டிய கடமையைச் செய்யத் தாமுலாகாதென்று மந்திராலோசனை சபையாருடைய வேண்டுகோளுக்கிணங்கி யிருக்கிறதாகவும், தம்மிடத்தில் நம்பிக்கை வைத்துத் தமது துரைத்தனத்தை அங்கீகாரம் செய்து பேசிய மஹாஜனங்களுக்குத் தாம் நன்றி கூறுவதாயும் சொல்லி எல்லாருக்கும் சமாச்சாரம் அனுப்பியிருக்கிறார். அவரனுப்பிய சமாச்சாரத்தை அப்படியே இங்கிலீஷில் இதற்கு முன்பக்கத்தில் அச்சிட்டிருக்கிறோம்.

---

## RACE CULTURE AND INDIVIDUAL CULTURE, OR EUGENICS AND EDUCATION.

### சமஷ்டி வியஷ்டி வித்யா சம்பத் சாதனம்.

"வித்தை" என்பது "வித்"=அறிதல் என்னும் தாதுவிலிருந்துண்டான பதம். அதன் அர்த்தம் அறிதலுக்கு அனுகுணமாயிருப்பது என்று சொல்லலாம். "சம்பத்" என்பது "ஆபத்" என்பதற்கு எதிர்மொழி. நிர்ப்பயமாக வசிப்பதற்கான பாக்கியம் என்பது அதன்பொருள். பயம் மூன்றுவிதமாய் வரத்தக்கது. அவை: (1) ஆதிபௌதிகம்,—பூதசம்பந்தமானவைகளாலுண்டாவது; இதுஸ்தூலகாரணமாயுள்ளது;(2) ஆதிதைவிகம்,-தைவிகசம்பந்தமானவைகளாலுண்டாவது; இது சூக்ஷ்மகாரணமாயுள்ளது; (3) அத்யாத்மிகம்,

தனக்குட்டானேயிருந்துண்டாவது; இது ஆத்மகாரணமாயுள்ளது, அதாவது அவித்யா சம்பந்தத்தாலுண்டாவது. இம்மூன்றுவித பயங்களும் ஸ்தூல, சூக்ஷ்ம காரணமாயுள்ள பிரகிருதி தர்மத்தின் காரியங்களாக விருக்கின்றன.

(1) ஸ்தூல காரணமான பயம் பூதபௌதிக சாஸ்திர ஞானசம்பத்தால் நீங்கும். இதையே தான் "Nature Study" என்றும் "Knowledge of Nature" என்றும் சொல்லுவர் மேலோர். இப்பொழுது நடந்துவரும் மஹாபாரத யுத்தத்தில் ஜெர்மானியர் ஒரு பக்கம், அவருக்கு எதிரிகளாயிருப்பவர்கள் ஒருபக்கம், இருதரத்தாரும் அவரவர்களுக்குத் தெரிந்த பூதபௌதிக ஞானவிசேஷத்தால் எதிரிகளையும் சண்டையில் சம்பந்தப்படாத சாமான்ய ஜனங்களையும் பயங்கொள்ளச் செய்துவருகிறார்கள். ஜெர்மானியர் விஷக்காற்றை உபயோகித்து எதிரிகள் படைகள் திக்குமுக்காடிப் போகச்செய்ததும், 23, 24 மைல் தூரத்துக்கப்பாலுள்ள பீரங்கியைக்கொண்டு டன்கர்க் (Dunkirk) பட்டணத்தைத் தகர்த்து நகரமாக்களை பயந்தோடச் செய்வதும் இதற்கு உதாரணமாம்.

(2) சூக்ஷ்மகாரணமானபயம் தைவிகஞானத்தால் நீங்கும். "தைவிகம்" என்பது "திவ்" என்னும் தாதுவிலிருந்துண்டான பதம். அதாவது ஜோதிமயமாயுள்ளது என்று அர்த்தம். இந்த ஜோதி, நேத்திரேந்திரியத்துக்குப் புலனாகாது. இந்திரியங்களை ஜயித்தவர்களான ஜிதேந்திரியர்களுடைய அறிவுக்கே யெட்டுவதாயிருக்கிறபடியால், இது சூக்ஷ்மலோக ஸம்பந்தமானதுபற்றி, "அதிஷ்டான தேவதை அல்லது தேவதாரூபம்" என்று சொல்லுவர். இது யோகஞானத்தால் சித்தவிருத்தி நிரோதம் செய்து மனதினுடைய சங்கல்ப விகல்பங்கள் இரண்டையும் நீக்கி அலையோய்ந்த சமுத்திரம் போலுள்ள மனதின் நிர்விகல்ப நிலையிலிருந்து ஆராயத்தக்கவர்களுக்கே சித்திக்கத்தக்கது. மனுஷபலம் கேவலம் ஸ்தூல சம்பந்தமானது. தைவிகபலமோ "ஜ்யோதி மனம்" என்று சொல்லும் தூயமன சம்பந்தமானது. தூயமனம் தூயஹிருதயமின்றி சித்திக்காதாதலால் ஸ்வயபயம் பாராட்டுகிறவர்களுக்கு தைவிகபலம் பூரணமாய் சித்திக்க மாட்டாது. சித்தித்தாலும் அனுகூலம்போலிருந்து பிரதிகூலம் விளைக்கும். இதற்கு ஜெர்மானியருடைய தந்திரமந்திர ஸ்தூலபலமெல்லாம் அவற்றிற்கு அதிஷ்டானமாயுள்ள தெய்விகபலமின்மையால் முதலில் அனுகூலம் போல் காட்டிப் பிரதிகூல ஹேதுவாய் மாறியிருப்பது உதாரணமாகும்.

(3) மூன்றாவதான அத்யாத்மிக காரணமான பயம் (தனக்குள் தானேயிருந்துண்டாவது) தன்னைத்தானறிவதாம் ஆத்மஞானத்தால் நீங்கும். இந்த பயம் நீங்கப் பெற்றவர்கள் ஆத்மரக்ஷைபெற்று ஆஸ்திகசித்தர்களாயிருந்து லோகரக்ஷார்த்தம் உழைக்க வல்லவர்களாகிறார்கள். ஏசுகிறிஸ்துவும் மற்றுமுள்ள இருஷிகள், ஞானிகள், அவதாரபுருஷர்கள் (*Saints, Sages and avatars*) இவர்களெல்லாரும் இவ்வகுப்பைச் சேர்ந்தவர்களாவார்கள்.

வித்தையென்பது அறிவுக்குக் கருவியாயிருந்துதவும் மனதின் பயிர்ச்சியாகும். இந்த மனப்பயிர்ச்சியும் தேஹப்பயிர்ச்சியின்றிப் பூரணமாய் சித்திக்காது. ஆகையால் தேஹமனோ சுத்தமின்றி வித்யாப்பியாஸம் பலித்துப் பயனைத்தாராது. வித்யாப்பியாஸம் என்றாலும் மனப்பழக்கம் என்றாலும் ஒன்றே. Concentration and assimilation என்று சொல்லும் ஏகாக்ரசித்த லப்தியோடு, தைலதாரைபோல் மனம் நினைத்ததோர் நினைவுதானாகி, அந்த நினைவும் நினைத்தவிஷயமதாகி யிலங்கி, காண்பான், காட்சி, காண்பொருள் ஆகியமூன்றும் தானேயாகி "திரிபுடிஞானம்" என்று சொல்லும் அறிவின் மூன்றுபடியான இலக்ஷணங்களும் இலக்ஷியந்தன்னோடு அபேதமாய் ஒன்றுபட்டு

விளங்கக்காண்பதுதானே யோகசித்தி என்றும் "Inner Perception" என்றும் "Knowledge of Things *Per Se*" என்றும் பலவாறு வித்வான்களால் சொல்லப்பெறும். இதற்குத்தான் "மனத்தெளிவு" என்று சொல்வது. இந்த மனத்தெளிவு சித்திக்கப் பழகுவதுதானேவித்தியாப்பியாசத்தின் நோக்கமாகும் (Aim of Education). இந்த வித்தியாப்பியாசமும் சாதனசாதகமென இருவகைத்தான இலக்ஷணமுடையதாயிருக்கும். சாதனமென்பது(Environment) என்று சொல்லும் புறப்பொருளிலக்ஷணம். இத்தலைப்பின்கீழ் போதனாசிரியர் யோக்கியதாம்சமும் போதிக்கும் சாதனமுறையும் அடங்கும். இவற்றைத்தான் "Qualifications of the teacher and the principles of methods" என்று சுட்டிக்காட்டியுள்ளார் முகட்டில் அச்சிட்டிருக்கும் இங்கிலீஷ் குறிப்பில், மற்றிரண்டு இலக்ஷணங்களான "Suitability of the subjects and above all the character of the 'stuff' on which these operate" என்று கூறியுள்ள இரண்டும் பக்குவமறிந்து போதித்தல், அதிகாரிலக்ஷணம் என்கிற தலைப்பிலமைந்து அகப்பொருளிலக்ஷணமாம் சாதகம் தானாகும்.

"சாதனமின்றிச் சாதிப்பாரில்லை." சாதகமின்றிச் சாதனமும் அமைபப்பெறாது. இவ்விரண்டும் பொருந்தியிருந்தால் தான்பிள்ளைகடைத்தேறிப்பிழைக்க வழியுண்டாகும். இதைத்தான் இங்கிலீஷ் முகட்டில் கடைசிபாக எடுத்துச் சொல்லியிருக்கிறார். அது மிகவும் முக்கியாம்சமாக இருப்பதுபற்றி அவ்வாக்கியத்தையே பின்னும் இங்கெடுத்தச்சிட்டுக்காட்டுகிறோம்.

"In the bringing up of the child two factors count, *viz*, the mental heritage (அகப்பொருளிலக்ஷணமான சாதகம்) and the circumstances of environment (புறப்பொருளிலக்ஷணமான சாதனம்); இவற்றில் "சாதகமின்றிச் சாதனமமையா" தாதலால், அதையே மேலாக மதிப்பர் மேலோர். ஆயினும் "சாதனமின்றிச்சாதிப்பாரில்லை" யாதலால், என்னதான் மேலான சாதகம் அமையப்பெற்றிருப்பினும் சாதனமின்றி அது சாதிக்கத்தக்கதாகாது. இதையே இங்கிலீஷிலும் வற்புறுத்திக் கூறியிருக்கிறார்.

ஸர் ப்ரான்ஸிஸ கால்டன் (Sir Francis Galton)என்பவர் எழுதியிருக்கும் "பாரம்பரிய மனோசக்தி"—"Inheritance of Human Faculty" என்னும் புஸ்தகத்தில் இந்த உண்மைகளைப்பற்றி அவர் நன்றாக விளங்க எழுதியிருக்கிறதாகச் சொல்லப்படுகிறது. இந்த உண்மைகள் ஸநாதநமாக (எப்பொழுதும் உள்ளவையாக) இருப்பதால் மேற்றிசையாரில் அவர் நூதனமாயிதை யுணர்ந்து உணர்த்துவாராயிருப்பினும் பிராசீன வித்தையில்சேர்ந்த இந்த உண்மைகள் "வேதம் அநாதி" யென்றது போல் காலவரையறைக்குள்பட்டதாயின்றி எப்பொழுதும் அகக்கண் பார்வையுள்ளவர்களுக்கு விளங்குவதாயிருந்து வந்திருக்கின்றன.

இக்காலத்துப் பள்ளிப் படிப்பைப்பற்றி ஒருவர் சொல்லியிருப்பதை இங்கிலீஷ் முகட்டில் காணலாம். அவர் இந்தப் படிப்பை "A process of cram and emetic"—உள்ளுக்குள் திணிப்பதும் வெளிப்பட வாந்தி செய்வதுமான முறைக் கொப்பாயிருக்கிறதென்று உவமை கூறியிருக்கிறார். இந்த உவமை உண்மையென்று போதகராயிருக்கும் ஒருவர் ஒப்புக்கொண்டு அதை உறுதியாகக் கூறியிருக்கிறார். "பாலைப் புகட்டலாம் பாக்கியத்தைப் புகட்டலாமா?" என்றொரு பழமொழியுண்டு. வித்தியாசம்பத்து பால் புகட்டுவது ('போட்டுவது') போல் புகட்டத்தக்கதல்லவென்பது ஸர்வஸம்மதமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்மை. அப்படியிருந்தும் இக்காலத்தில் பள்ளிக்கூடங்களில் படிப்பைப் "புகட்டியே" வருகிறார்கள். பரீக்ஷை காலத்தில் அதை வெளிப்பட வாந்தி பண்ணுவோன் பரீக்ஷையில் தேறினவனாகிப் பின்னால் "வித்வத்" பட்டம் பெறுவானாகிறான். இந்த "வித்

வத்" பட்டங்கள் என்ன பிரயோசனத்தைத் தரும்? நிஷ்பிரயோசன மானவையாக விருக்கிறதென்றே நிதான புத்தியுள்ளோர் எல்லாரும் சொல்லி வருகிறார்கள். இதற்குக் காரணம் என்னவாயினும் "எண்ணைச் செலவே யன்றி பிள்ளை பிழைப்பது பூஜ்யம்தான்" என்கிற வசனத்துக்கு இலக்கா யிருக்கிறது இக்காலத்து பள்ளிப் படிப்பு என்கிறார். இது வாஸ்தவம்தானே.

மனிதன் (வியஷ்டி பாவத்தில்) முன்னுக்கு வருவதெல்லாம் சமஷ்டிபாவத்தில் தேவித்தெளிந்தவனாக வென்றேயன்றி வேறு எதற்குமல்ல. பிள்ளையாண்டான் படித்து பரீக்ஷையிற்றேறிப் பெற்றோர் மனமகிழ வரசொல்கம் நிரம்ப வாங்கிக்கொண்டு இவனைத் தேடி வாழ்க்கைப்பட்டவள் குடிதாழ, பூனை குட்டிபோடுவதுபோல் சில குழந்தைகளைப் பிஞ்சில் பழுத்த வம்பல்வடுபோல் பெற்றுவிட்டு துப்புக்கெட்ட ஜீவனம் செய்து தானும் சுகப்படாமல் தன் மனைவிமக்களும் சுகப்படாமல் உண்டு கொழுத்தோ அதற்கும் வழியின்றி இளைத்தோ உழவு மாடுபோல் ஜீவனம் செய்து வருவது படிப்பின் பயனில்லை. இவ்வித வியஷ்டிபாவ ஜீவனமுறையால் சமஷ்டிசேதன சௌக்கியத்துக்கு எத்தாலும் குறைவேயன்றி நிறைவொருக்காலும் உண்டாகமாட்டாது.

ஆதலால் சமஷ்டி சேதனவிர்த்திக்கு அனுகுணமான பலனை யளிக்கும்படிப்பே வித்யாம்சத்தில் சேர்ந்ததாகும். இந்த வித்யாகலைக்கு "Eugenics" என்று நவீன பேர் கொடுத்து மேற்றிசையில் வித்வத் சிரேஷ்டர்களாயுள்ளவர்கள் இந்த கலைக்ஞானம் விர்த்தியாகவேண்டுமென்று உழைத்து வருகிறார்கள். தற்கால நாகரிக படாடோபங்களுக்கின்றியமையாத வியஷ்டிபாவ ஜீவன முறையானது சமஷ்டிபாவ சேதன விர்த்திக்கு முற்றும் பிரதி கூலமாயிருக்கிறதுபற்றி ஜனசமூகங்கள் வரவர சிற்றின்பங்களை நாடிப் பேரின்ப வாழ்வை யிழந்து சமஷ்டி சேதனக்ஷயத்துக்குக் காரணமாயிருக்கிறதை யுணர்ந்து உள்ளுறச் சிந்தித்து அதன் உண்மை தேர்ந்தவர்கள் தாங்கள் உணர்ந்ததை உணர்த்த முயற்சித்து வருகிறார்கள். அவர்களுக்கு நூதனமாயிருப்பது பிராசீனரான நமக்குப் புராதனமாயும் நமது இருஷிகள், ஞானிகள், அவதார புருஷர்கள் என்றென்றைக்கும் உள்ளதாக உணர்ந்து உணர்த்திய பூர்வீக சம்பிரதாயமாயுமிருக்கிறது.

பூர்வீக சம்பிரதாயம் என்றால் புராதனமாயுள்ள சத்பழக்கம் என்று அருத்தம். அந்த சம்பிரதாயத்தின் வலி இரண்டொரு தலைமுறைச் சிறுவர்கள் நவீனவழிபற்றி நவநாகரிகம் கொண்டாடி வருவதால் அழிந்து போகாது. பல்லாயிர வருஷங்களாகச் சமஷ்டிசேதன விர்த்தியில் ஈடுபட்டு ஜாதிவர்ணாச்ரம தர்மங்களாக ஏற்பட்டு உறம்பெற்ற சமஷ்டி வித்யா வாசனை (Race culture) 'வியஷ்டி பாவத்தில் ஒரு சாரார் முறை பிறழ்ந்து நடந்து வருவதால் வலி குறைந்து வாசனை கெட்டுப்போகாது. ஆகையால் இந்தப் பூர்வ வாசனை நமது (Race culture) சமஷ்டி சேதன விர்த்தியாம்சமாயிருக்கும்போது தானே நாம் உண்மைவழிப்பட்டு ஸ்தூல, சூக்ஷ்ம, காரண மூன்றிலும் கடைத்தேறி உய்யும் வழியுணர்ந்து அதுபற்றி நடக்கவேண்டும். இதற்குத் தற்கால வித்யாசாலைகள் அனுகுணமாக விருக்கவேண்டுமென்பதே இந்தியா கவர்ன்மெண்டாருடைய நோக்கமும் முயற்சியுமாயிருக்கிறது. இந்த நோக்கமும் முயற்சியும் நன்கு விளங்க வேண்டுமென்றே ஸர் சங்கரன் நாயர் அவர்களைப்போன்ற இந்திய சிரேஷ்டரை வித்யாமந்திரியாகத் தெரிந்தெடுத்து நியமித்திருக்கிறார்கள். அவர்களுடைய நல்லெண்ணம் நிறைவேற சத்துக்களெல்லாரும் சாதகபுருஷர்களாயிருந்து சாதனந்தேடிச் சாதிக்கப்பிரயாசைப் படவேண்டும்.

## "INDIA AND THE WAR."

OPPORTUNE HELP FROM INDIA.

*(By Sir Francis E. Younghusband, K. C. I. E.)*

## இந்தியாவும் யுத்தமும்.

உற்றவிடத்துதவி.

Speaking of the opportune arrival of the Indian troops in France, Sir Francis Younghusband, K. C. I. E., in his lecture on "India and the War" delivered under the auspices of the Royal Colonial Institute, on May 11th, said: "A year ago it would have been thought impossible. Ten thousand troops had been sent from India to Natal in the South African War, but no one would have supposed that as many as 70,000 could have been sent as far away as to France. The specially satisfactory point to note is that they reached the fighting line in the very nick of time when they were most urgently needed. They arrived when the Germans, foiled in their rush to Paris, were making their tremendous lunge at Calais. Just at the moment when our line, thin to breaking point had to hold back the incessant and terrific onslaught of the Germans, this contingent of troops from India came upon the scene, and in their first serious action, on October 28, carried the village of Neuve Chapelle, since become so famous. Had we not been able to bring up these reinforcements from India, had our position there been so precarious that we could not afford to take them away and *a fortiori* had we been under necessity to send out more British troops to strengthen our position in India, then in all probability our troops in Flanders would not have been able to stay the German onrush, and our brave little army would have been swept off the Continent. That Indians were able to help the French, the Belgians, and ourselves in stopping a blow which the Germans had prepared for years is a thing of which they may be proud, and for which we should always be grateful to them."

ஸர் ப்ரான்ஸிஸ் யங்ஹஸ்பண்ட், கெ. ஸி. ஐ. இ. அவர்கள் இந்தியாவில் துரைத்தன நிர்வாகம் செய்து பெயர் பெற்றவர். இவர் சென்ற மேமீ 11உ செவ்வாய்க்கிழமையன்று லண்டன் ராயல் கலனியல் இன்ஸ்டிடியூட் சபையாரின் ஆதரவில் "இந்தியாவும் யுத்தமும்" என்னும் விஷயமாய் ஒரு வியாஸம் எழுதி வாசித்தார். அப்பொழுது பார்லிமெந்து மெம்பரான "ரைட் ஆனரெபிள் சார்ல்ஸ் இ. ஹாப்ஹௌஸ்" அவர்கள் அக்கிராசனம் வகித்து இந்தியர்கள் எவ்வளவு ஊக்கத்தோடும் உருக்கத்தோடும் ராஜ விசுவாஸம் காட்டிச் சண்டை போட்டு வருகிறார்கள் என்பதை ரூபிக்க சண்டைமுகத்திலுள்ள இந்தியன் ஆபிஸர் ஒருவர் காயம்பட்டு ஆஸ்பத்திரியிலிருந்து அவருக்கு எழுதின கடிதமொன்றை வாசித்துக் காட்டினர். அதில் அவருடைய கடமையெல்லாம் அரசன் வெற்றி பெறத் தன் உடலைக்கொடுத்துச் சண்டை செய்பவேண்டிய தொன்றே யென்றும் அந்தக் காரியம்மட்டும் நிறைவேறி விட்டால் தான் காயம்பட்டுக் கிடந்தாலும் போர்முகத்தில் மடிந்து வீர சுர்க்கம் சேர்ந்தாலும் அதைப் பற்றி அவருக்கு விசாரமில்லை யென்று எழுதியிருந்தார்.

ஸர் ப்ரான்ஸிஸ் யங்ஹஸ்பண்ட் அவர்கள் இந்தியராணுவங்கள் உற்ற விடத்துதவியாக வந்து ஆதரவு அளித்ததைப்பற்றி வெகு உருக்கமாகப் பேசினர். ஒரு வருஷத்துக்கு முன்னல் இந்திய ராணுவங்கள் ஐரோப்பிய யுத்தத்தில் வந்து உதவி செய்வது முடியாத காரியமென்று நினைத்திருப்பார்கள். தென்னுபிரிகாவில் நடந்த யுத்தத்திற்கு 10-ஆயிரம் துருப்புகள் இந்தியாவிலிருந்து நட்டாலுக்கு அனுப்பப்பட்டன. ஆனல் இப்பொழுது நடக்கும் பாரதப்போருக்கு 70-ஆயிரம் துருப்புகள் இந்தியாவிலிருந்து வந்திருக்கின்றன. இதில் ஒரு விசேஷ மென்னவெனில் அவர்கள் சண்டைமுகத்தில் உற்றவிடத்

துதவியாக நல்ல சமயத்துக்கு வந்து சேர்ந்தார்களே அது தான் பெரிது என்றார். ஜெர்மானியர்கள் பாரிஸைக் கைப்பற்றச் செய்த முயற்சி பயன்படாதொழிய ஆவேசம் கொண்டு காலே (Calais) பட்டணத்தைப் பிடித்துக்கொண்டு அது மூலமாக இங்கிலாந்தைத் தாக்கப் பெருமுயற்சிசெய்து வந்தார்கள். அந்த சமயம் பிரிடிஷ் சைனியம் சண்டைமுகத்தில் தேய்ந்து எதிரிக்கு ஈடு கொடுத்து நிற்பது கஷ்டமாகவிருந்தது. அந்த சமயத்தில் இந்தியராணுவங்கள் சமயசஞ்சீவியாக வந்து சேர்ந்து ஜெர்மானியர்களை யெதிர்த்து நியூவ்சாபெல் சண்டையில் அவர்களைப் புறங்காட்டி யோடும்படிச் செய்தார்கள். இது அக்டோபர்மீ 28உயில் சம்பவித்தது. மார்ன் சண்டையைவிட நியூவ் சாபெல் (Neuve Chapelle) கிராமத்திடத்தில் நடந்த சண்டை ஒருவிதத்தில் மிகவும் விசேஷ பிரக்கியாதி பெற்றதாய்விட்டது. மார்ன்நதி தீரத்தில் நடந்த சண்டையினால் ஜெர்மானியார் பெருவெள்ளம் போல் எல்லாவற்றையும் அவர்கள் சைனிய பலத்தின் முன் துரத்தியடித்து பாரிஸ் நகரை பிடிக்க விருந்தது விருதா யத்தனமாக மாறியது. நியூவ்சாபெல் சண்டையினால் அவர்கள் காலே (Calais) பட்டணத்தைப் பிடித்துக் கொண்டு அங்கிருந்து இங்கிலாந்தைத் தாக்கச் செய்த யத்தனம் பலிக்காது போயிற்று. இந்தியா அனுப்பிய இராணுவங்கள் சமயசஞ்சீவியாக வந்துதித்து இந்தப் பேருதவி செய்ததற்காக பிரிடிஷார் இந்தியர்க்கு என்றென்றைக்கும் நன்றிபாராட்டக் கடமைப் பட்டிருக்கிறார்கள் என்று அவர் சொன்னார். அவர்கள்மட்டும் அப்பொழுது வந்திராவிட்டால், ஜெர்மானியர் 'காலே' பட்டணத்தைப் பிடித்துக்கொண்டு அங்கேயுள்ள மலைக்குன்றுகளின்மேல் அவர்களுடைய பெரிய "லாங்ரேஞ்சு" பீரங்கிகளை யேற்றி 23, 24-மைல் தூரத்துக்கப்பாலுள்ள டன்கர்க் பட்டணத்தை அவர்கள் அப்பொழுது தகர்த்து வருவது போல் இங்கிலாந்திலுள்ள டோவர் பட்டணத்தைத்தகர்த்து டோவர் ஜலசந்தியில் கப்பல் போகாதபடி நன்றாக அதை வசப்படுத்திக் கொண்டிருப்பார்கள். அப்படிப்பட்ட அபாயம் நேராமல் காத்தது இந்தியராணுவங்கள் சமயசஞ்சீவியாக யுத்தகளத்தில் தோன்றி எதிரிகளை முறியடித்தோடச் செய்ததனால் வாய்ந்ததென்று நன்றாக விளங்கவெடுத்துச் சொல்லிப் பிரசங்கித்தார். இந்தியராணுவ உதவிமட்டும் அப்படி சமயசஞ்சீவியாக வந்துதித்து உற்ற விடத்துதவி செய்திராவிட்டால் பிரிடிஷ் சைனியங்கள் ஐரோப்பா கண்டத்திலிருந்து சண்டைசெய்ய முடியாதபடி அவைகளை துடைத்தொழித்திருப்பார்கள் ஜெர்மானியர். அவ்வளவு ஆக்குரோஷத்தோடு அவர்கள் பிரிடிஷ் சைனியங்களை யெதிர்த்து பிரிடிஷ் நாட்டைத் தாக்கமுயற்சித்தார்கள். ஜெர்மானியர் பலவருஷங்களாகச் சிந்தித்து அதற்கு வேண்டிய ஆயத்தங்களெல்லாம் முன் யோசனையோடு செய்தும் கடைசியில் அவர்கள் உத்தேசத்தை நிறைவேற்றி விடுவார்கள் போலிருந்த சமயத்தில் இந்திய துருப்புகள் சமய சஞ்சீவியாக அனேக ஆயிரம் மைல்கள் தூரம் கடந்து வந்துதித்து எதிரிகள்செய்த பஹிரதப் பிரயத்தனமெல்லாம் பலிக்காதபடிச் செய்து பிரிடிஷாருக்கும், ப்ரெஞ்சுக்காரர்களுக்கும் பெல்ஜியம் தேசத்தாருக்கும் உற்றவிடத் துதவியாயிருந்துபகரித்ததைப் பற்றி அவர்கள் பெருமைப் பட்டுக்கொள்ளக் காரணமிருக்கிறதென்றும் அவர்கள் செய்த இந்தப் பேருதவிக்காக நாம் (பிரிடிஷார்) அவர்களுக்கு எப்போதும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோமென்றும் சொன்னார்.

## THE "CHILDREN'S DAY" CELEBRATION OF THE VICEROY'S BIRTHDAY.

### "ஹார்டிஞ்சு ஜயந்தி" யென்னும் பாலர் திருவிழாக் கொண்டாட்டம்.

லார்ட் ஹார்டிஞ்சு அவர்கள் இவ்வருஷம் நவம்பர்மீ இந்தியாவை விட்டுப் போகவிருந்தவர் அடுத்த மார்ச்சுமாசம் முடிவுவரையில் 5-வருஷத்துக்குமேல் இன்னும் 5-மாசகாலம் நீடித்து இங்கிருக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அவரும் பொதுக்ஷேமத்தைநாடி சொந்த சௌகரியத்தைப் பாராட்டாது அப்படியேயிருக்கச் சம்மதித்திருக்கிறார். அவர் இந்தியாவைவிட்டுப் போனபிறகும் கூட அவரும் அவருடைய பெருமாட்டியாரும் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்த "பாலர் திருவிழா"க் கொண்டாட்டமானது ஒவ்வொரு வருஷமும் நம்மால் கொண்டாடத் தக்கது. சிறுவர்களுடைய சுபாவமென்னவென்றால், ஒருவர் செய்வதைப்பார்த்து அதைப்போல் செய்வது. இதற்கு "Imitative faculty" என்று பெயர். பெரியோர் நல்லகாரியம் செய்தாலும் தப்பான காரியம் செய்தாலும் அதைப்போலவே செய்வார்கள். அதனாலேயே பெரியோர்கள் "குலத்தளவே யாகுமாம் குணம்" என்றும் 'சகவாஸதோஷ"'மென்றும் சொல்லியிருப்பது. குழந்தைகள் குணம்பெற வென்றே வீட்டில் பெரியோர்கள் ராமாயணம், பாரதம், பக்தர்கள் சரித்திரம் முதலியவைகளைப் படிக்கச் சொல்லுவதும், ஸ்திரீகள் அவைகளைப் பாட்டுகளாகவும் கீர்த்தனங்களாகவும் சொல்லுவதும். லார்ட் ஹார்டிஞ்சு அவர்களும் அவர்களுடைய பெருமாட்டியாரும், டில்லி நகர் பிரவேசம் செய்யும்பொழுது திடீரென்று அகஸ்மாத்தாய் நேர்ந்த ஆபத்து வேளையில் (யாரோ ஒரு காதகன் அவ்விருவர்பேரிலும் வெடிகுண்டைப் போட்டபொழுது) பக்தி வைராக்கியத்தோடு சாந்தமே பூஷணமாயிருந்ததினாலேயே, மலைபோல் வந்துற்ற துன்பத்தைத் தாங்க வல்லவர்களானார்கள். அதுவும் தெய்வ கடாக்ஷத்தால் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கினது. தேசத்தின் ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடி வரையிலும் அலைமோதினாற்போல் பரவின ஜனப்பிரீதி அனுதாபத்திற்கு நன்றியறிவைக்காட்டவும், ஆபத்துவேளையில் கடவுள் கிருபைகூர்ந்த வைபவத்தைக் கொண்டாடவும் இதர கொண்டாட்டங்களை விட்டு "பாலர் திருவிழாக்" கொண்டாட்டத்தை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரச்செய்தது அவ்வுள்ளன்பும் பக்தியுமே. குழந்தைகள் மாசற்றவர்களாதலால் மனதில் ஒவ்வொன்றும் பசுமரத்தாணிபோல் பதியும் சுபாவமுள்ளவர்கள்.

இது "ஹார்டிஞ்ச் ஜயந்தி" கொண்டாடத் துவக்கின மூன்றும் வருஷம். முதல் வருஷம் ஹார்டிஞ்சு பிறந்தநாள் மகோற்சவத்தை குழந்தைகள் தமக்கேயுரிய நாளாகக் கொண்டாடினார்கள். குழந்தைகள் ஹிமாசல முதல் கன்யாகுமரி வரையில் ஒரே மனதுள்ளவர்களாய் லார்ட் ஹார்டிஞ்சு அவர்களும் அவருடைய பெருமாட்டியாரும் அகஸ்மாத்தாய் நேர்ந்த ஆபத்து வேளையில் பக்தி வைராக்கியத்தோடு சாந்தசீலராய் மலைபோல் வந்துற்ற துன்பத்தைத் தாங்கி, பகவத் கடாக்ஷத்தால் அது சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கப்பெற்ற வைபவத்தைக் கொண்டாடினார்கள்.

அவ்வருஷம் ஜூன் மாதம் 20ந்தேதி சாயங்காலம் சென்னையைச் சேர்ந்த ராயப்பேட்டையிலுள்ள "பாட்டர்ஸ் கார்டன்" என்னும் விசாலமான தோட்டத்தில் சுமார்

20,000 பேர்கள் வரையில் பள்ளிப் பிள்ளைகள் கூடியிருந்தார்கள். அநேக விளையாட்டுகளும் வேடிக்கைகளும் நடந்தன. விளையாட்டுப் பந்தயங்களில் ஜெயித்தவர்களுக்கு மிஸ்டர் ஜெ. எச். ஸ்டோன் அவர்கள் அக்கிராசனாதிபதியாக விருந்து பென்ஸிலும் பேனாவுமாகப் பரிசு வழங்கினார். பாலருக்காகவென்று அச்சிடப்பட்ட விவேகசிந்தாமணி அனுபந்தத்தின் 2000 பிரதிகளை வைத்துக்கொண்டு 20,000 பேர்களுக்கும் வழங்குவதெப்படியென்று ஒரு சிறுவன் தவித்தான். அத்தர்மசங்கடத்திலிருந்து அக்கிராசனாதிபதியவர்கள் அச்சிறுவனைக் காப்பாற்றினார். அப்பிரதிகளை அவனிடமிருந்து வாங்கி ஒவ்வொரு பரிசோடும்கூட வைத்து வழங்கினார். இப்படியாகச் சென்னையில் "பாலபோத சமஷ்டி சேவை ஸாதனம்" அமுலுக்கு வந்தது. பிறகு நமது அரசர் பிரதிநிதி சென்னைக்கு விஜயமாக வந்தபொழுது குழந்தைகள் யாவரும் அவருக்கும் ஹார்டிஞ்சு பெருமாட்டியாருக்கும் வந்தன வழிபாடாக ஒரு பத்திரம் சமர்ப்பித்தார்கள். அதில் லார்ட் ஹார்டிஞ்சு அவர்கள் குழந்தைகளுக்கு சொன்ன புத்திமதிகளை "மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்" என்றபடி சிறுவர்கள் அமிர்த வசனமாகக் கொண்டு அந்தப்படி நடப்பதாக வாக்களித்தார்கள்.

அந்த வாக்குத் தவறாமல் குழந்தைகள் நடந்து வர அவர்களுக் குழைப்பதில் ஊக்கங் கொண்ட விவேகசிந்தாமணியை பாலர்களுக்குபயோகமாகும்படி நடத்தவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். இதைப்பற்றி வித்யா இலாகா அதிகாரிகளுக்கு எழுதியதில் அவர்களும் அனுகூலமாகவே யிருந்தார்கள். சிறுவர்களுக்கென்றே உழைக்கவேண்டு மென்றார்கள். அப்படியே பிரமாணிக்கமும் வாங்கிக் கொண்டார்கள். அவர்களும் இன்னல் செய்யாது ஸாதகமளிப்பதாகப் பிரமாணிக்கம் செய்து வாக்களித்தார்கள். இது நிற்க.

இரண்டாம் வருஷம்

வெளி ஆடம்பரங்களில்லாமல் "ஹார்டிஞ்சு ஜயந்தி" என்று பாலர் திருவிழா இங்கே வீடுகள்தோறும் குடும்ப ஸகிதமாய்க் குழந்தைகளால் கொண்டாடப்பட்டது. லார்ட் ஹார்டிஞ்சு அவர்களும் இப்படிக் கொண்டாடப்பட்ட "பாலர் மஹோற்சவ தினம்" வீண் போகலாகாதென்று ஸிம்லாவில் சுமார் 15,000 குழந்தைகள்சேரக் களியாட்டம் கொண்டாடி மஹோற்சவத்தைச் சிறப்பித்தார்.

மூன்றும் வருஷம்.

இவ் வருஷமும் சென்ற வருஷம்போல் குழந்தைகளெல்லோரும் வீட்டில் ஹார்டிஞ்சு ஜயந்தி கொண்டாடுவார்களென்று கேட்டுக்கொள்ளப்படுகிறது. இவ்வருஷம் மே மாதம் 18-ந்தேதியன்று ஸிம்லாவிலுள்ள பாலர் திருவிழாக் கூட்டகமிட்டியார் பாலர் மஹோற்சவ தினத்தை கொண்டாடினதோடுகூட, வருஷந்தோறும் அதைக் கொண்டாடுவதற்கான ஏற்பாட்டையும் செய்தார்கள். கல்கத்தாவிலும் கொண்டாட ஏற்பாடுசெய்து வருகிறார்கள். நம்தமிழ் நாட்டுச்சிறுவர்கள் இவ் வருஷம் "ஹார்டிஞ்ச் ஜயந்தி" கொண்டாடுவதற் கனுகூலமாக நாம் சிறுவர்களுக்காகவென்று அமைத்த "சமஷ்டியானை" அல்லது "கஜலக்ஷ்மி" யென்கிற சித்திரப் படத்தையும், லார்ட் ஹார்டிஞ்சு அவர்களின் குடும்பத்தின் படத்தையும் இம்மாசச் சஞ்சிகையில் பிரசுரித்திருக்கிறோம். "சமஷ்டியானை" சித்திரபடமானது முதலில் "விவேகசிந்தாமணி யுத்த காண்டத்தில்" பிரசிரிக்கப்பெற்று எல்லாருக்கும் வழங்கப் பெறலாயிற்று.

## THE CHILDREN'S DAY FESTIVAL
### (Celebrations at Home)
ANTHEMS, HYMNS AND CIVIC SONGS FOR CHILDREN.

வீடுகள் தோறும் பாலர் திருவிழாக்கொண்டாட்ட மகிழ்வுரை.

---

### THE CHILDREN'S PRAYER.
(From Gitanjali)

வரகவி ரவீந்திரநாத் தாகோரியற்றிய

"பிரார்த்தனைக் கொத்து."

---

1. அண்ணலே யுன்றனடிபணிந் தன்பன் செய்
விண்ணப்ப மீதையே வேண்டினேன் வரந்தரு
[வாய் !

2. ஏழையே னுள்ளத் துறைதரித்திர மத்தனையும்
பிழை திருத்தி நிர்மூல மாகவே தீர்த்திடுவாய்!

3. துக்கமொடு சந்தோஷம் வருவனவெ லாமையே !
மிக்கவெளி தாகநான் பொறுக்கவலி தந்திடுவாய் !

4. அன்புமிகுந் துணைத்தொழவே யாசைகொண்டே
[னம்மானே !
என்பணியும் வளரவேதா னெனக்குவர மருள்
[வாய் நீ !

5. 'ஏழைபங் காளிநீ' யெனவறிந்தே னுனையுள்ளத்
தேழைகளை யொறுக்காவண்ண மெனக்குவலி தந்
[திடுவாய் !

6. கர்வமிகு வல்லாள கண்டரைக் கண்டுழிநான்
'ஸர்வமுநீ' யென்றவரைப் பணியாத படியெனக்
[குத் திடமருள்வாயென்னீச !

7. தினமெனக்கு நேருசிறு தொல்லைகளில் தலையி
[றங்கி
மனஞ்சிதரு துன்மனஸே சித்திக்க வரமருள்
[வாய் !

8. என்வலிதா னெவ்வளவே யாயிடினு மத்தனையும்
உன்வலியே யென்றுணர்ந் துனக்கடிமை யாகு
[மொரு

*தன்வலியை வேண்டினேனுன் எனக்கிந்த வலி
[யீன்று
என்னீச ! எனையுனக்கின் னடிமையாக்கொ ளரு
[ள் புரிந்தே !

---

*தன்வலி—ஆத்மசக்தி.

['கவிசக்ரவர்த்தி' யென்று இராஜப்பிரதிநிதியவர்களால் புகழ்பெற்ற ஸ்ரீமத் டாக்டர் ரவீந்திரநாத் தாகோர் அவர்கள் 'கீதாஞ்சலி' யென்னு மவர் மஹிமை பெற்ற கிரந்தத்திலிருந் தெடுத்து ஸ்ரீஹார்டிஞ்ச்ஜயந்தியை குழந்தைகள் திருநாளாக திருவிழாக் கொண்டாடும் பாலர்களுக்காகத் தமிழ் செய்யப்பட்டது இது.—C. V. S.]

### CHILDREN'S TRIBUTE OF LOVE TO THE VICEROY.

அரசர் பிரதிநிதி வாழ்த்து.

## ஸ்ரீ ஹார்டிஞ்ச் பிரபு ஜயந்தி.

---

### குழந்தைகள் வாழ்த்துத் துதி.

"மூவாறுமாகி நின்றாள்: வித்தையொ டவித்தையாம்
கலைகளென்ன காமிய மென்ன !"—தேவிதுதி.

ஹார்டிஞ்ச் பிரபுவே ! யருள்வலி யுடையோய்!
பாரிடிஞ்சாலும் வானிடிஞ்சாலும் பொய்யுரை
[சொல்லாய் !

பேரிடி முழக்கம் போலுயிர் வாங்கும் பாதகக்
கூர்வெடி குண்டினு லின்னுயிர் வாங்கவே
மாரிடி நெஞ்சம் நினைத்த வஞ்சகப் பேய்களின்
கூரிடிகாயம் பட்டுப் பதைத்து மூர்ச்சித்தபோதும்-
சீரடி சாந்தம் குறையா துள்ளம் தடுமாறாது
மானிடவெள்ளம் போலுள கூட்டத் திடையிருந்
[தையே

நுண்ணிடை மின்னா ளுன்பணி செய்யவே
கண்ணுடை வள்ளலே கருணையே உருவாய்
மின்னிடைத்தோன்றிய பொன்னுருவெளிபோல்
மன்னிடைத் தோன்றிய மாதவக் கொழுந்தே !

உன்திரு நாளைப் பெருநாளாக் கொண்டாடக்
கூடின குழந்தைகள் நாங்க ளெல்லோரும் குதூஹ
[லத்துடனே

வாழிமிக வாழியென்று வாழ்த்துகிறோம் ஐய !
[வும்மை

பதிவிரதா சிரோமணியாய்ப் பாரிலுள்ளோர் துதி
[க்குமம்மை

ஹார்டிஞ்சுபெருமாட்டியன்பிலேநீ ரேந்நாளும்
துன்பின்றி வாழ்கவென்று துதிக்கிறோம்
[கடவுளையே !

---

## THE FESTIVE CALL.

**To celebrate "the Children's Day Festival."**

(20th June, 1915.)

"பாலர் திருவிழாக் கொண்டாடுவோம் வாரீர்!"

(Specially composed to celebrate the *Children's Day Festival*, 1914.)

பல்லவி.

பாலர் திருவிழாக் கொண்டாடு வோம்வாரீர்!
சீல முடன் மெத்த கோலம தாகவே,—
—பாலர் திருவிழாக் கொண்டாடுவோம்!

சரணங்கள்.

(1) பாலர் திருவிழாக் கொண்டாடு வோம்நாங்கள்
சாலவு மெத்தநல் ஹார்டிஞ்ச்ப்ர பூமகிழ்
வேலவன் லீலைசெய் ஞாலமெ லாம்புகழ்
சீல மிகுபால தேவனைத் துதித்துள்ளே,—
—பாலர் திருவிழாக் கொண்டாடு வோம்வாரீர்!

(2) மேலைநாட் சீர்மையில் நாமெல்லாம் பெரியோராய்
வேலைசெய் வேளையில் வில்லங்கம் வாராமல்
நாலைந்து மொன்றாக நாம்வளர்ந் துற்றபோ
தாலையிற்க ரும்பேபோலன்புமிகுந் தென்புருக,—
—பாலர் திருவிழாக் கொண்டாடு வோம்வாரீர்!

(3) தாய்தந்தை மகவெனும் திரிமூர்த்தி தேவர்கள்
வாய்பொத்திச் சேவைசெய் பகவான் ஒருவனைச்
சேயென்று மகிழ்ந்துளந் தாய்வாரிக் கொண்டாப் [போல்,
தேயமெலாம் புகழ் 'ஹார்டிஞ்சஸ்' நாமாக 'ஹிரு [தாஞ் சலீ'பாடி,—
—பாலர் திருவிழாக் கொண்டாடு வோம்வாரீர்!

(4) துன்பம்வந் துற்றாலும் என்புறக் கிழியவே
அன்புமி குந்தம்மா! பாலரைச் சிந்தித்துள்
என்புதோல் போற்றிய வித்தேகம் வருந்தினும்
அன்புரு வாம்பாலர் மகிழ்வே பெரிதென்ற வள் [ளலை சினைந்து
—பாலர் திருவிழாக் கொண்டாடு வோம்வாரீர்!

(5) தாயைப்போல் மகளென்னும் தூயர்சொல் மெய்க் [கவே
சேயைப்போல் தாய்தந்தை மகவுந்தான் கூடியே
காயைப்பழ மாக்குபரங் கருணையோ டொன்றான
சேயைப்போல் மகிழ்ந்தாடு 'டயமண்ட்' பெண் [மணிவாழ,—
—பாலர் திருவிழாக் கொண்டாடு வோம்வாரீர்!
சீல முடன் மெத்த கோலம தாகவே,—
—பாலர் திருவிழாக் கொண்டாடுவோம்!

## THE CHILDREN'S DAY FESTIVAL.

In Sacred Memory of H. E. Lady Hardinge.
God Save
THE FOUNDER OF THE CHILDREN'S DAY.

பாலர் திருவிழா.

தாயன்பாலென்னம்மை ஹார்டிஞ்சு பெருமாட்டி
தூயவராம் குழந்தைகளைத் தன்னிதயத் துள்ளிரு [த்தி
சீயவராம்காவலர்கோன் ப்ரதிநிதியாம் பர்த்தாவின்
ஸ்ரீஜயந்தி கொண்டாடச் சொன்னவர் தம்குடியனைத் [துங் காத்தருள்வாய்!
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

---

'இன்றைப்போல் என்றைக்கும் கொண்டாடுவோம்.'

The Annual Celebration of the Day.
The Children's Resolve.

அம்மா, தாயே! மஹாராஞ்ஜி!
அடியேம் குழந்தைகள் உனைத்தொழுவோம்!
மிடிதீர ஹார்டிஞ்சு ஜயந்தி இன்றைப்போல்
என்றைக்கும் 'குடிவாழக்கோன்வாழக்' கொண் [டாடுவோம்!
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

---

வாழி-Prayer for Blessings on the Country and the King.

வாழிமிகவாழியென்று வாழ்த்தவலி தந்தருள்வாய்
"வரப்புயர!" வென்றம்மை வாழ்த்தினர் கோனை [யல்லோ
"வரப்புயர, வயலுயரக், குடியுயரக், கோனுயர"
வரந்தருவாய்! அம்மாதாயே! இதுநாங்கள் கேட் [கும் பழம்.
அம்மா, தாயே! காப்பாற்று!
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு.

—*From the Children's Anthem or Hridanjali.*

---

TO THE HONORABLE DIAMOND HARDINGE.

தாயைப் போல் மகளென்னும் தூயர்சொல் மெய்க் [கவே
சேயைப் போல் தாய்தந்தை மகவுந்தான் கூடியே
சாயைப்பழ மாக்குபரங் கருணையோ டொன்றான
சேயைப் போல் மகிழ்ந்தாடு 'டயமண்ட்' பெண் [மணிவாழ
பாலர் திருவிழாக் கொண்டாடி னோம்
சீலமுடன் மெத்த கோலம தாகவே—
—பாலர் திருவிழாக் கொண்டாடி னோம்.

சுபமஸ்து.

## ECHOES OF WAR.

### Exploits of Bussy.

### வெடிமருந்தும், வேறுபாஷையும்

---

சுமார் 170 வருஷங்களுக்கு முன் விஜயநகரத்தையாண்ட விஜயராமராஜனுக்கும் பொப்பிலியையாண்ட இரங்கராவுக்கும், தொன்றுதொட்டு நீடியபகையிருந்ததனால், விஜயராமராஜன் அப்பகையை விட்டு நேசமாகவேண்டுமென்று எண்ணி அதற்காகப் பலவாற்றானும் முயன்றான். கோழிப்பந்தயத்தில் இவ்விருவருக்கும் பிரியமுண்டாதலால், விஜயநகரராஜ்யத்தில் ஒருபந்தயம் விட்டு வேடிக்கைபார்ப்பதற்குப் பொப்பிலியார் அழைக்கப்பட்டார்கள். இருநாட்டாரிலும் பெரியோர் சிறியோர் யாவரும் தாம்வளர்த்துப்பழக்கிய கோழி, டேடை, மயில், வல்லூறு முதலிய பறவைகளையெடுத்துக்கொண்டு ஓரேயிடத்தில் சந்தித்து வேடிக்கை நடத்தினார்கள். பொப்பிலிராஜனுடைய கோழி நெடுநேரம் விஜயராமனுடைய கோழியுடன் யுத்தம் செய்து வென்றுவிட்டது. ஒரு தரத்தார் தாம் வென்ற செருக்காலும், மற்றொரு தரத்தார் தாம் தோற்ற அழுக்காற்றாலும் ஏற்றத்தாழ்வான வார்த்தைகளை வழங்கியதனால் இப்பந்தயம் ஸமாதானம் உண்டுபண்ணுவதற்குப்பதில் மனஸ்தாபத்தை யதிகரித்தது.

அக்காலத்தில் புதுச்சேரியிலிருந்து, கோலகொண்டா நவாப்பைப் பார்க்கப்போயிருந்த பிரான்ஸி லா புஸி (Francis la Bussy) என்னும் பிரெஞ்சு ராஜ்யதந்திரி, அவரிடம் விடைபெற்றுக்கொள்ளும் பொழுது, கீழ்த்தேசங்களைப்பார்க்கவேண்டுமென்று தனக்குள்ள ஆவலைத் துவிபாஷ் இலக்ஷ்மணய்யா மூலமாய்த் தெரிவித்துக்கொண்டார். இந்த இலக்ஷ்மணய்யா இருபாஷையும் நன்றாயறிந்தவனாதலால், பிரெஞ்சு தெரியாத சுதேச அரசர்களாலும், சுதேச பாஷை யறியாத புஸி முதலியவராலும் சன்மானிக்கப்பட்டு வந்தான். புஸி கருத்துக்கிணங்கிய நவாப்பு தன் மித்திரர்களாகிய விஜயராமனுக்கும் இரங்கராவுக்கும், அவன் வருவதையும் அவனுக்குச்செய்யவேண்டிய மரியாதைகளையும் பற்றி, இலக்ஷ்மணய்யாவை நிருபங்கள் எழுதச்செய்து அனுப்பினார்.

வெள்ளைக்காரர்கள் ஒருவரும் அறியாத நாட்டினரென்றும், முரடரென்றும், குடியரென்றும், அக்காலத்தில் அறியாத ஜனங்கள் பரப்பிய வதந்தியால், கொஞ்சம்கலங்கிய விஜயராமன் பொப்பிலியார் மீது தனக்குள்ள அறுவறுப்பை விட்டுத் தாங்களிருவரும் ஒன்றுசேர்ந்து புஸியை எதிர்கொண்டழைக்கலாமென்று சூசிப்பித்து, இரங்கராவுக்கு நிருபம் அனுப்ப, ரங்கராவின் தமையன் மகன் வெங்களராவு அதைக்கொலுவில் படித்துப் பார்த்து ஆண் பிள்ளைகளும் இப்படிப் பயந்து பிறர்துணை நாடலாமா என்று தூஷித்துக் கிழித்தெறிந்து, கடிதம் கொண்டுவந்த தூதரையும் அவமானப் படுத்தியனுப்பிவிட்டான். இதனாலும் விஜயராமனுக்குக் கோபம் அதிகரிக்க, அவன் துவிபாஷ் லக்ஷ்மணய்யாவைச் சிநேகம்பண்ணிக்கொண்டு, புஸி தன்னாட்டிற்கு வருமுன்னமே விலைபெற்ற காணிக்கைகள் தயார்செய்து, புஸி சமுகத்தில்வைத்துக் கண்டு அவனுடைய தயவைச் சம்பாதித்து, அவன் மூலமாய் இரங்கராவுக்குத் தீங்கு செய்ய வழிதேடினான்.

புஸி வருகிறதையறிந்த இரங்கராவு, தன் மைத்துனனும் சுத்தவீரனுமாகிய பாபாராயனைத், தன் ராஜதானியினின்று ஒரு நாட்பயணத்தூரமுள்ள ஒரு கிராமத்துக்குப்போய் அவன் வரும் வழியிற் காத்திருந்து இட்டுவரும்படி யனுப்பினான். பொப்பிலிராஜர்கள் துஷ்டரென்றும், ஒருவரையும் மதியார்களென்றும் அவரைஜெயித்துத் தனக்குப் பட்டம் கட்டிவைத்தால் தக்கவெகுமதி கொடுப்பதாயும் சொல்லிப் புஸியின் மனதைத் திருப்பித் தன் வசமாக்கிய விஜயராமன், அவருடன் இலக்ஷ்மணய்யாவும் தன்பட்டாளமும் பின்

தொடரச்சென்று பொப்பிலியினின்றும் 60-மைல் தூரமுள்ள ஒரு ஊருக்குப்போய்த் தங்கினான். பாபாராயன் எதிர்கொள்ள வந்து காத்திருக்கிறதைக்கேட்ட விஜயராமன், நல்ல பாதையை விட்டுக் காட்டுமார்க்கமாய்ப்போவது யுக்தமென்று யாவருக்கும் மெய்ப்பித்து, பாபாராவு காத்திருப்பதைப் புஸி அறியாதபடி செய்து, எதிர்கொண்டு வாராமல் தன்னை யவமதித்ததாய் அவனுக்குத் தோன்றுமாறும் செய்தான்.

காட்டுவழியாய்ச் சென்ற புஸிதுரையும் விஜயராமனும், வழியில் தென்பட்ட ஊர்களையெல்லாம் கொள்ளையிட்டு அங்குள்ள காப்பாளர் கொடியயுத்தம் செய்து தமது சேனையில் சேதம் உண்டுபண்ணியும், சுதேசிகளுக்குத் தெரியாத பொருள்களாகிய வெடிமருந்தினாலும் குண்டுகளினாலும் அவரைக்கொன்று, சிக்கிரத்தில் பொப்பிலிக்கோட்டையைச் சமீபித்து அதைச்சூழ நாற்புறத்திலும் கூடாரமடித்துத் தங்கினார்கள். கோட்டையினுள்ளே கவலையன்றி வாழ்ந்த இரங்கராவுக்கு இவர்கள் வருகையும் பாபாராவு வாராமையும் ஆச்சரியத்தையும் மனச்சஞ்சலத்தையும் உண்டுபண்ணியது. யுத்தத்தின்பொருட்டே வந்தார்களென்பதை யுக்தியாலறிந்த இரங்கராவு, தன் கொலுவுக்கு திவான் தர்மராயரையும், தமையன் மகன் வெங்களராயரையும் அழைத்து, ஊரை விட்டு வலசை போய்ப் பிறகு விஜயராமனுக்குப் புஸி சகாயமில்லாத காலத்தில் வந்து அவனை வென்று தம் தேசத்தை மீட்டுக்கொள்வது என்ற தன் யோசனையை வெளியிட அவர்களால் அது மானக்கேடென்றும், நேரில் புஸியிடம்போய்ச் சமாதானத்துக்கு வேண்டிய ஏற்பாடு செய்வது நலமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

இலக்ஷ்மணய்யாவுக்குத் தக்க பரிசுகொடுக்கப்பட்டதனால் திவானுக்குப் புஸியுடைய பேட்டி கிடைத்தது. புஸி தன் சிநேகனாகிய விஜயராமனிடம் கேட்காமல் சமாதானத்தைப்பற்றிப்பேச முடியாதென்று சொல்ல, திவான் எங்களிருவருக்கும் உள்ள விவாதத்தில் நீ பிரவேசிக்காமல் வேடிக்கைபார்த்துக்கொண்டிரு என்று வேண்டினார். அதற்கும் அவன் இணங்கானாக, தர்மராவு கோபத்துடன் தன் கத்தியையுருவிப் புஸியைக் கொன்றுபோடுவதாய் ஓங்க, அப்போது இலக்ஷ்மணய்யா "பொறுங்கள். தங்கள் யுக்தம்போலத் துரை நடக்க ஒத்துக்கொள்ளுகிறார். தங்கள் ஆண்மையைப்பற்றி வியக்கிறார்" என்று பொய்யாகப் புஸி சொல்லும் வார்த்தைகளுக்குப் பொருளுரைத்து, அவரைத் தன் கூடாரத்துக்கு அனுப்பிவிட்டுத் தான் தனியே அரசன் கூடாரத்துக்குச்சென்று இங்கு நடந்ததையுரைத்தான். அவன் தன் சிப்பாய்களை ஏவித் தர்மராவை உயிருடன் திரும்பிப்போகவொட்டாமல் கொண்டுவரும்படி சொன்னான். தர்மராயரோ, தன் பரிவாரத்தினராகிய எல்மதுரைகளென்னும் வீரருடன், குதிரையேறிச் சேனையின் நடுவே தங்கள் கைவாள்களினால் வழிசெய்துகொண்டு சென்று தப்பித்தார்.

மறுநாள் முதல் கொடுமையான யுத்தம் நடந்தது. கோட்டைக்குள்ளிருந்து வெங்களராவு, பாபாராவுக்கு ஒரு கடிதம் எழுதியதைக் கீரைவிற்கும் பெண்கள்போல் வேஷம் தரித்த இரண்டு வீரர் வசம் அனுப்ப அதை விஜயராமன் காவலாளர் பிடித்துக்கொண்டு அவ்விருவரையும் பீரங்கிவாயில் சுடும்படிசெய்தார்கள். கற்பிற்சிறந்தவளும் உத்தமஸ்திரீயுமாகிய பட்டத்தரசி மல்லம்மதேவி தன்னையும் தன் இளம் குழந்தையையும் மற்றும் ஊரிலுள்ள ஏழைக் கிழவரையும் ஸ்திரீகளையும் பற்றி மனமிரங்கித் தாங்கள் ஒரே குலத்திலுதித்ததையும் நினைத்து இந்தத்தடவை மன்னிக்கவேண்டுமென்றும், தனக்கு மங்கிலியபிக்ஷை கொடுக்கவேண்டுமென்றும் ஒரு கடிதம் எழுதி விஜயராமனுக்கு அனுப்ப அதையவன் கிழித்து இராணியைத் தூஷணமாய்ப்பேசிக் கடிதம் கொண்டுவந்த தாதியையும் அவமானப்படுத்தியனுப்பினான்.

இரங்கராவு தன் சேனாதிபதிகளை ஒவ்வொருவராய்ச் சண்டைக்கனுப்ப, அவர்களும் அவர்கள் சேனைகளும் தங்கள் பாகுபலத்தினாலான வரையில் யுத்தம் செய்து கடைசியாக புஸியுடைய வெடிமருந்தின் வலியால் மாண்டார்கள்.

இப்படியாகவே, மல்லம்மதேவி வருஷம் நிரம்பாத தன் புதல்வன் வெங்கடராயனையும், தன் தாதிகளுள் புத்தியிலும் வயதிலும் மூத்த வெங்கடலக்ஷிமியையும் மாறுவேஷம் பூணச் செய்து, கடைசியாகத்தன் மகனுக்குப் பால் கொடுத்துத் தழுவி முத்தமிட்டு அவனைக்காப்பாற்றும்படி கடவுளைப் பலவாறு உள்ளம் நொந்து பிரார்த்தித்துக் கோட்டைக்கு வெளியே பாபாராவிடம் சேரும்படி சொல்லியனுப்பினாள். அவர்களையும் அரசன் காப்பாளர் பிடித்து அரசனிடம்விட, அவன் இரங்கராவு மகன் என்பதை யுணர்ந்து தன் கத்திக்கிரையாக்கவேண்டுமென்று கோரினான். இப்பாவி நெஞ்சின் கடினத்தன்மையை வெறுத்த புஸி அக்குழந்தையைத் தன் மடிமீதேற்றி முத்தமிட்டு அவனிடம் விளங்கும் சுபலக்ஷணங்களைக் கண்டு மகிழ்ந்து தன் சேனையாளரில் சிலர் வசம் ஒப்புவித்து அவ்விருவரும் அபேக்ஷிக்கும் இடம்வரை காத்துச் செல்லும்படி உத்தரவிட்டான்.

கடைசியாய் யுத்தத்தில் வெங்களராவும் இறந்துபோகவே, இரங்கராவு தான்மட்டும் தனித்திருப்பதை யுத்தேசித்துத் தானிறந்தால் எதிரிகள் தனக்கு மானக்குறைவான காரியம் செய்ய இடமில்லாதபடி, மைத்துனன் நரஸராயனிடம் தன் கத்தியைக்கொடுத்து தன்னை (இவ்வுலகத்துக்குக்) கட்டும் கயிறுகளை யறுத்துவிடும்படி வேண்டினான். இவ்வார்த்தைகளின் குறிப்பையறிந்து நரஸராவு அந்தப்புரத்துக்குச்சென்று மல்லம்மதேவி முன்னிற்க இவன் எண்ணத்தை யூகித்தறிந்த வம்மாது நான் அரசனுக்னைக்கு வணங்கினேனென்று தலைசாய்ந்து நின்றாள். விரித்துக் கூறுவானேன். கோட்டையிலுள்ள ஸ்திரீகளெல்லாம் தங்கள் கணவராலும் உறவினராலும் கொல்லப்பட்டார்கள். கீர்த்தியாகிய தேகத்தை மாசுபடாமல் காப்பதே முக்கியமென்று கருதும் வீரருக்கு, என்பு தோல் முதலிய சேர்த்து, எவ்விதமும் அழிவதற்கே யமைத்த யாக்கை பெரியதன்றல்லவா?

இரங்கராவும் தன் பரிவாரத்தாராகிய எல்மதுரைகளும், தாங்கள் பாழாக்கிய கோட்டையைவிட்டு வெளியேறித்தாங்கள் அரிதென்று எண்ணிய பொருள்களையெல்லாம் வலியத்துறந்ததற்குக் காரணரான விரோதிகளோடு கடும்போர்புரிந்தார்கள். யுத்தத்தின் கொடுமையையும் முக்கியமாய்த் தன்னைக் கொல்லவே விரைந்து வரும் வேகத்தையும் கண்ட விஜயராமன் அந்த வீரர்கள் கண்ணுக்ககப்படாமல் ஓடிபொளிந்துகொண்டான். யாவரையும் வென்று அமர்க்களத்தில் புலிகள் போலுலாவும் இவர்கள் வரும்வழியில் கடைசியில் வஞ்சகமாய் மருந்தையும் குண்டுகளையும் பரப்பி, நல்லசமயத்தில் கொளுத்திவிடவே, யாவரும் கீழேவிழுந்து, தங்கள் விரலேனும் அசைபச் சக்தியுள்ளதாயிருக்கும்வரை போராடி மாண்டனர்.

குண்டுகள் அனேகம் தேகத்தில் புகுந்ததனால் களைத்துவிழுந்த இரங்காராவைப் புஸி வந்துபார்த்து இத்தகைய போர்ச்சிங்கத்தைக் கொன்றதற்காக மனம் வெம்பி விஜயராமனைச் சூலவெறுத்தான். ஆயினும் வெற்றியடைந்ததனால் இராணுவத்திலுண்டான ஆரவாரங்களும் மறுநாள் விஜயராமனுக்குப் பட்டங்கட்டும் பெரியகாரியத்தின் முன் செல்வனவாகிய தமாஷ்களும் இரவில் நெடுநேரம்வரை யிருந்தன.

தன்சகோதரி குமாரன் வெங்கடராவு தனியே வருகையையும் இராஜ ஆடம்பரங்களின்மையையும் கண்டு அதிசயித்த பாபாராவு, தானிருக்கும் நேர்வழியைவிட்டுக் கள்ளமார்க்கமாய் விரோதிகள் சென்றார்களென்பதையும்,

தன் அருமையான உறவினர்மாண்டார்களென்பதையும் அப்போதுதான் அறிந்து மிகத்துயரெய்திக், குழந்தையைத் தக்க சம்ரக்ஷணையில் வைத்து, இரண்டு வீரரும் தானும் உருமாறிப் புறப்பட்டு, விஜயராமன் மந்திரியினிடமிருந்து கடிதம் கொண்டுவந்த தூதர்களென்று கூறி அவன் கூடாரத்தையடைந்தான். பிறகு நள்ளிரவில் கொடியோனாகிய அவ்வரசன் படுக்கையறையை யடைந்து, தன் சகோதரியையவன் தூஷித்தகாலத்துச் சொன்ன கடுஞ்சொற்கள் கைக்குவலிமைகொடுக்க, கையீட்டியால் அவனைக்குத்திக்கொன்று பிறகு "பாப்பாராவு யுத்தத்துக்கு வந்தான்" என்று உரக்கக்கூவி உறங்கும் சேனைகளை யெழுப்பி விட்டான். இருட்டில் மித்திரரென்றும் சத்துருக்களென்றும் அறியாமல், விஜயராமன் சிப்பாய்கள் ஒருவரையொருவர் வெட்டிக்கொண்டு கொலையாடினார்கள்.

இப்போரரவம் கேட்ட புஸி, இலக்ஷ்மணய்யாவை யழைத்து, இஃது யாதென்று வினவ, உண்மைசஞ்சரியாத நாவினனாகிய அவன், விஜயராமன் இரவில் உன்னைக்கொன்று நாளையுனக்குத் தருவதாகச் சொன்ன பணத்தை மிருக்கலாமென்று முயலுகிறான் என, அவன் விஜயராமன் சேனைகளைத் தயையின்றிக் கொல்லும்படி தன் சேனைக்கு உத்தரவு கொடுத்தான். அங்ஙனமே, அவ்வரசன் சேனைகளும் வெடிமருந்துக் கிரையாய்போயின. காலையில் புஸி தன் சேனைகளுடன் புதுச்சேரிக்குப் பயணமாக, இலக்ஷ்மணய்யாவும், வந்த பொழுதைக் காட்டிலும் மிகுந்த தனவானாய்த் தன்னூராகிய பந்தருக்குச் சென்றான்.

இவ்வளவு உயிர்ச்சேதத்துக்கும் காரணமாகிய துவிபாஷி இலக்ஷ்மணய்யா க்ஷேமமாயும் பொப்பிலிநகரம் பாழாயுமே வெகுகாலம் இருந்திருக்கக்கூடும் என்று இதை வாசிப்பவர்கள் கணமேனும் எண்ணுவார்களா? வாஸ்தவத்தில் வெங்கடராவுக்கு விபரம் தெரிந்து தன் பெற்றோர் அடைந்த கஷ்டங்களைக் கேட்டவுடன், நேரில் கோல்கொண்டா நவாப்பினிடம் சென்று அவருதவியையடைந்து; துரோஹியாகிய இலக்ஷ்மணய்யாவைக் கொல்வித்துத் தன் தகப்பன் வீற்றிருந்த சிம்மாசனத்தில் ஏற்றிவைக்கப்பட்டு நெடுங்காலம், புதிதாய் வளம்பெற்ற பொப்பிலியை ஆண்டு வந்தான்.

# A BRIEF SKETCH OF THE HISTORY OF INDIA.

## இந்துதேச சரித்திர ஏலப்பாட்டு.

### THE BRITISH CONQUEST.

### III. அங்கிலேயர் விஜயம்.

அன்புடனே நமையாளும் - மன்னர்
ஆனவிங்கி லீஷ்துரைகள்
முன்பிந்நிலம் முழுவதையும் - ஜயித்த
முறைமையினை யினிக்கேளாய்.

முடுகு.

1. தென்புடனேமுந்நூறு வருஷங்கள் முன்னே
தேசத்தைவிட்டிங்கு நேசத் தொடன்னார்
செப்புமொருவர்த்தகம் வைப்பினிடை முந்தாச்
செய்யவுத்தேசமொடு பையவே வந்தார்.

2. இன்பமொடுவர்த்தகம் செய்யுமவர் பற்றி
எளியோரைநேசித்து வலியோரை வெற்றி
இசைவாகவேகொண் டிராச்சியம் அமைத்தார்
எல்லார்க்குநல்லா ரெனும்பேர் சமைத்தார்

3. முன்புவங்காளத்தை முற்றிலும் கொண்டார்
மூடத்துருக்கரசு கேடென்று கண்டார்
மோதிவருசூஜாவ தௌலாவை எத்தால்
முனைவென்றுவலிகொண்டு பணியப் படுத்தார்

4. மொய்ம்புடனெதிர்த்துவரு கொம்பனும் ஹைதர்
முரணேறுமவன்மைந்தன் ரணசூர பஹதர்
முதலானபலவீரர் அதமாகக் கண்டார்
முனிவின்றிக்குடிகளைக் கனிவோடு கொண்டார்

5. பின்புமஹாராஷ்டிரர் தம்பலம் அறுத்தார்
பெரிதாகக்கொண்டவவர் விருதுகள் பறித்தார்
பீஷ்வாவையாதரித் துறவு கொண்டாடப்
பேதையதையோரான் வளர்த்த வொருமாடு

6. வன்புடனேமார்பிலே பாய்ந்தவித மேவ
மருவாதுபகைகொண்டு பொரவந்து தாவ
மற்றவனைமுற்றவும் வெற்றிகொண்டப் பால்
மதியாதபிந்தாரி யினமுற்றும் இப்பால்

7. துன்பமொடுமடியச் சிதைத்தனர் கழித்தார்
தோன்றுமொருசீக்கர்தம் மாக்கமும் அழித்தார்.
துன்னிநட்டவர்களுக் கிடையூறு செய்யும்
துரோகமுறுசிப்பாய்கள் ஏகமாய் வெய்ய

8. கம்பமுறவென்றுகொடி கட்டினார் செல்லக்
கருதியேதாம்வென்ற தேசங்கள் எல்லாம்
கருணையுறுமஹாராணி கையிலே உய்த்தார்
கண்ணிணைபோலெந்நாளும் காத்தருள வைத்தார்
ஏலேலோ ராமஜயம்.

## THE BRITISH RULE IN INDIA.

## IV. இங்கிலீஷ் அரசாட்சி.

(5)

ஆதரவா நமையாளும் - மன்னின்
அரசியலை யறிந்திடவே
ஏதமற இனியுரைப்பேன் - மானே
இன்பமுடன் நீகேளாய்.

முடுகு.

1. ஓதுமித்தேசமுழு தும்வென்ற பின்பு
உற்றதனைநலமாக ஆளவே அன்பின்
உபாயங்களில்மிக்க வல்லோர்க ளாலே
உரியபலபிரிவாகச் செய்ததன் மேலே

2. ஏதமறுவங்காளில் ஒருதுரைத் தனமும்
இயலானபம்பாயில் ஒருதுரைத் தனமும்
இலகுமதிராஸிலே யொருதுரைத் தனமும்
ஏற்றமுறுபஞ்சாபிலொ ருதுரைத் தனமும்

3. தீதில்வடமேற்குமா காணத்தில் ஒன்றும்
செப்புமொருமத்தியமா காணத்தில் ஒன்றும்
தேடுமஸ்ஸாமுதற் பிரிவுகளில் வேறும்
திறமாகஏற்பாடு செய்துபல வாறு

4. மேதகையினிந்திய துரைத்தனம் என்று
விளம்புமிவையாவுக்கும் மேலான தொன்று
விரிவாஅமைத்துவரு குடிகளைக் காக்க
விதமானபலசட்டம் புதிதாக ஆக்கி

5. மோதிவருகலகஞ்செய் துஷ்டரை அடக்கி
முரணழித்துப்பேழைப் பாம்பா யடக்கி
முன்னாளில்சுக்ரீவ ஆக்கினைய தென்பார்
மொழியுமிவராக்கினைக் கிணையேது தின்பார்

6. சோதரர்கள்போலவே எல்லோரும் வாழத்
துன்பமுறுகள்ளர்பயம் முதலான வீழச்
சுதமானபலகட்டுக் காயிதாச் செய்து
சொல்லுமொருபொருள்தன்னை யளவின்றிப் பெய்து

7. நீதிபுரியதிபர்களை நன்கு நிய மித்து
நிலவுகுடிகட்குதவி யாக ஒரு மித்து
நிகரில்பலசாலைகால் வாய்கள் பாலங்கள்
நெடிதான கல்லணைகள் முதலாகத் தங்கள்

8. போதமலிகல்வியின் பொலிவா லமைத்துப்
புந்திமகிழ்ரயில்வண்டி தந்திகளி ணைத்துப்

போக்குவரவுகள் வர்த்த கம்வியா    பாரம்
புவியெங்குமெளிதாக நலமாகச்    சேர

9. வேதனைசெய்பிணிகட்கு வைத்யங்கள்    செய்ய
விதம்விதமா ஆஸ்பத்ரிகள்கட்டி    வெய்ய
வேறுபிணிமேலும்வா ராமல்    தடுக்க
மிக்கானசுகவிர்த்தி சாதனம்    அடுக்கிக்

10. காதலொடுபல்கலைச் சாலைகள்    அமைத்துக்
கனமானபண்டிதரை யங்குநிய    மித்துக்
காணுமக்கழகங்க ளிற்கற்கும்    மைந்தர்
கருதுமனவிருள்முற்றும் ஒழியப்    புரிந்து

11. பேதைமையையறிவெனும் சுடரால்    அகற்றிப்
பிழையிலறிவைப்பரவச் செயலாலே    முற்றும்
பேசரியகொடியபல் வழக்கங்கள்    கெட்டுப்
பெட்பாரும் நாகரிக நடைகள்மே    விட்டு

12. நாதமலிபெருமையினை எல்லோரும்    மேவி
நண்ணரியசமயகலை ஞானங்கள்    யாவும்
நவைதீரஉள்ளங்கைக் கனிபோலக்    கண்டார்
நலமாகராஜாங்கத் தலைமையும்    கொண்டார்

13. சோதியுறவின்னுமே லாகத்தி    ருந்தச்
சுகமாகப்பலசீர் திருத்தம்    பொருந்தத்
துணையானவலிகொண்டு திரைகடல்    கடந்து
தோன்றும்மேல்கீழ்சீமை யெங்கணு    மடைந்து

14. கோதகலுமுத்யோக மேன்மைபல    முற்றிக்
கொள்ளவருகௌரவம் பலவாகப்    பெற்றுக்
குறியானவர்த்தகம் கைத்தொழில்க    ளோடு
குறையாதவிவசாயம் மிகைபெற்று    நீடி.

15. சீதமலிபூர்வபட் சத்துமதி    போலே
செல்வமொடறம்தன்னி லோங்கிழென்    மேலே
தேடரியநன்மையெல் லாம்வந்து    சூழச்
செப்புமஹாராணியவர் குடைநிழலில்    வாழ

16. மாதமும்மாரிபெய் துலகெங்கும்    வாழி
மன்னுமங்கிலம்வாழி இந்தியா    வாழி
மகிமையுறுவிக்டோரி யாபுத்ரர்    வாழி
வாழையடிபோலேயவள் வமிசமென்றும்    வாழி

ஏலேலோ ராமஜயம்.

(முற்றும்.)

## ADVENTURES WITH A JELLY FISH.

## ஜல்லிமீனால் நேரிட்ட அவஸ்தைகள்.



உலகத்தில் அற்புதமான பொருள்கள் எவ்வளவோ இருக்கின்றன. அவற்றுள் ஜல்லி மீன் என்பதொன்று. இதைப்பற்றி ஒருவர் பின் வருமாறு எழுதுகின்றனர்.

ஒருநாட்காலையில் நான் கடற்றுறையில் இறங்கி நீந்திக்களித்துக்கொண்டிருந்தேன். அப்போது சிறிதுதூரத்தில் மணற்றிட்டுப் போல் ஒரு பொருள் தோன்றியது. அலைகள் ஓங்கி அடித்துக்கொண்டிருந்தமையால் அப்பொருள் அலையில்முழுகி யெழுந்து தோன்றுவதும் மறைவதுமாகவிருந்தது.

இக்கரை எனக்கு நன்றாகத் தெரியுமாதலின் அவ்விடத்து மணற்றிட்டு இருக்கக் காரணமில்லையே என்று கருதி அப்புதுமையான பொருளை நோக்கி நீந்திச்சென்று அதற்குப் பத்துப் பன்னிரண்டு கஜதூரத்திற் சென்றதும் அது ஏதோ ஒரு பிராணி என்று தெரிந்துகொண்டேன். அதை யடுத்து நோக்கவெனக்கு இஷ்டமில்லாமையால் கப்பலினின்றும் தவறிக் கடலில் வீழ்ந்த ஏதோ ஒரு பிராணியின் உடலம் என்று நினைத்து அதை விட்டு விலகினேன். அதை நான் அடுக்கும் போது என்னிடதுகால் விரல்களில் ஏதோ சுறீரென்றது. எனக்கு ஏற்கனவே காலில் வெடிப்புக் கண்டிருந்தமையால் நீந்தும்போது வலியுண்டாகுமாதலின் ஊசி குத்துதல்போலும் அவ்வெடிப்பின் வலியென்று எண்ணினேன். ஆகலால் அதை அதிகமாய்க் கவனிக்கவில்லை. ஆயினும், சிறிது நேரத்துக்கெல்லாம் அவ்வலி வரவர அதிகமாகி காஞ்சொறிந்தினவுபோலத் தோன்றியது. உடனே சங்கதி இன்னதென்று மனத்திற் பட்டது. கரைக்குக் கூடியசீக்கிரத்தில் திரும்பினேன். அப்படித் திரும்புகையில் என் வலதுகையை ஜலத்துக்குமேலே தூக்க அதில் முப்பது நாற்பது மெல்லிய தெளிவான நூல்கள் தொங்கிக்கொண்டிருக்கக் கண்டேன். அன்றியும் அந்நூல்கள் ஒரு மீனின் கால்களென்றும் அம்மீன் நாற்பது ஐம்பது அடிக்கு அப்புறத்தே இருந்தபோதிலும் அதன் தொடர்ச்சி விடவில்லை என்றும் தெரிந்துகொண்டேன். நான் கரையைச் சாருமுன்னே வலிபொறுக்க முடியாமற்போயிற்று. குளிர்ந்த ஜலத்தைவிட்டு நீங்குதலும் அவ்வலி இன்னும் பாதை மிகுந்தது. எங்கெங்கே அந்நூல்கள் என்னுடம்பில் ஒட்டிக்கொண்டிருந்தனவோ அவ்விடங்களில் எல்லாம் சிவந்தகோடு கிழித்தது போலத் தோற்றியது. வலி பழுக்கக் காய்ச்சிய ஊசியொன்றை மெல்ல நரம்புகளூடே ஏற்றினாற்போல இருந்தது. உடை மேலே எவ்வளவாவது படினும் பொறுக்க முடியாமல் இருந்தது. என்னிருப்பிடத்தைச் சேர்தற்கு இரண்டுமைல் தூரம் நான் நடக்கவேண்டியிருந்ததனால் நான் அதற்குள்ளாக அடைந்த அவஸ்தைகளைச் சொல்லவேண்டியதில்லை. நீங்களே ஊகித்துக்கொள்ளலாம். இவ்வலி இவ்வளவு கடினமாயிருப்பினும், அக்கொடிய ஆயுதங்களால் உண்டான மற்ற அவஸ்தைகளை நோக்க அது ஆயிரத்தில் ஒரு பங்குகூட இராது. சுவாசமும் நெஞ்சின் அடிப்பும் இரத்தத்தின் ஓட்டமும் இரண்டும் நின்றுவிட்டன. இடையிடையே, மார்பின்வழியாய் சுறீர்சுறீரென்று ஒரு குத்தல் மார்பினூடே துப்பாக்கி ரவையொன்று பாய்ந்ததுபோலத் தோன்றும். பின்பு மார்பின் அடிப்பு ஒரு கணமும் ஒருயுகமென்று தோன்றும்படி சிறிது நேரம் நின்று பின்பு மார்பைப் பிளந்து கொண்டு வெளியே வருவதுபோல ஆறு ஏழு தாண்டல் ஒரேமுட்டாகத் தாண்டும். சுவாசகோசம் செயலற்றுச் சுவாசம் உட்செல்லாமல் நின்றுவிடும். பின்பு சுருக்கென்னு மவ்வலி மார்பினூடே பாயும். இவ்விதமாகவே மாறி மாறி உண்டாகும். எனக்கு இரண்டு நிமிஷம்

இரண்டு வருஷம் போல தோன்றியது. என்னிருப்பிடம் சேருமுன் நானபட்ட அவஸ்தைகள் இவை. வீடுசேர்ந்ததும் தயிலமொன்று வைத்திருந்த குப்பியை எடுக்க, இவ்விதமான அசந்தர்ப்பங்களில் நேரிடுவதுபோல அதில் பொட்டளவேனும் தைலமில்லை. அதனுல் இன்னொரு குப்பி தயிலம் தருவிக்கும்வரையில் பொறுத்துக்கொண்டிருக்கவேண்டியதாயிற்று. தயிலம் உடம்பிற் பட்டதும் கடுப்புச் சற்று நின்றது. ஆயினும் எதிரிருந்த கண்ணுடியில் அகஸ்மாத்தாய் என் முகத்தை நான் பார்க்க நேரிட்டபொழுது அது எனக்கு ஜாடை தெரியவேயில்லை. முற்றிலும் வெளுத்துச் சுருங்கிப்போய் வேர்வை முத்துமுத்தாய் நிரம்பியிருந்தது. நான் வலி நீங்கி எப்போதும் போல் நடப்பதற்கு நாலைந்துநாட் சென்றது. மூன்றரை மாதம் வரையில் அந்தச் சுருக்கு வலி மார்பில் நாலில் இரண்டில் தோற்றும். ஆயினும் இவ்வளவோடு போயிற்றே அதுவே பெரிது, அவ்விஷக் கால்களின் அவஸ்தை இவ்வளவு கடுமையாயிருப்பினும் அவைகள் தாக்கிய இடங்கள் கொஞ்சங்கொஞ்சமாய் இரண்டு மூன்று இடங்களே தவிர அதிகமில்லை. ஒரு காலில் முழங்காலுக்குச் சற்று மேலும் வலதுகையின் பெரும்பாகமும் முகத்தில் நாலைந்துவரைகளும்தான். இன்னும் உடம்பு நெடுகத் தாக்கியிருக்குமாயின் என்னுல் கரைக்குவந்து சேரக்கூடுமென்று நான் நினைக்கவில்லை. இப்படிப் பட்டு அறிந்ததை நான் மறக்கமாட்டேனென்று உங்களுக்கே தெரிந்துகொள்ளலாம். அது முதலாக நான் எப்பொழுதாவது ஜலத்தில் இறங்கினுல் என்னை இவ்வளவு அவஸ்தைப்படுத்திய இந்த ஜல்லிமீன் மீசையுந் தாடியுமாய் எங்கு நிற்குமோ வென்று வெகு ஜாக்கிரதையாய்ப் பார்த்துவிட்டுத்தா னிறங்குவேன்,

## FIRUZ SHAH—THE BENEFICENT.

## பிருஸ் ஷா வென்னும் பேருபகாரி.

இத்தேயத்தில் முற்காலத்தில் ஆண்டுவந்த மகமதீய அரசர்களுக்கும்தற்காலத்தில் ஆண்டுவருகிற அங்கிலேய துரைத்தனத்தாருக்கும் பற்பல விஷயங்களிலும் உள்ள பற்பல பேதங்களினும், ஒன்று அதி முக்கியமானது. அம் மகம்மதிய அரசர்கள் குடிகளிடத்தில் வாங்கியவரிகளைத் தத்தம் சுகத்துக்கும் மனோபீஷ்டத்துக்கும், சிலபோது தமது மனக்குறுக்குக்கும் தக்கபடி அரண்மனைகள் ஆஸ்தானங்கள் பள்ளிகள் கோபுரங்கள் கோரிகள் ஸ்தம்பங்கள் உத்யானங்கள் உபவனங்கள் முதலான கட்டடங்களிலும் வெட்டிவேலைகளிலும செலவுசெய்தார்களே யன்றி ஜனோபகாரமான சாலைகள் பாலங்கள் கால்வாய்கள் கல்விச்சாலைகள் முதலானவைகளிற் செலவுசெய்தார்களில்லை. ஆயினும் முற்றிலுமே ஒருவரும் செய்ததில்லை யென்று கூறக்கூடாது. ஒருவர் இருவர் அருமருந்துபோலச் சிற்சில உபயோகமான காரியங்களைச் சிறக்கச்செய்திருக்கின்றனர். அவர்களில் முக்கியமானவர் இருவர். அவ்விருவரினும் முந்தினவரும் சிறந்தவரும் பிருஸ் ஷா என்னும சக்கிரவர்த்தி. இவர், வீரம் கல்வி முதலான அநேக நற்குணங்களைப் பெற்றிருந்தும் அநேகம் கொடுமையும் புத்தியீனமுமான பித்துத்தொழில்களைச் செய்து ஜனங்களை எமனைக்கண்ட உயிர்போல நடுங்கச்செய்துவந்த மகா கொடியோனுகிய மகமத்பின் டோக்ளாக் என்னும் வன்கண்ணனுக்குப்பின் சிங்காசனம் ஏறி அரசுபுரிந்தவர். அவன் காலத்திற் குடிகளுக்குண்டாகிய துன்பங்களாகிய வல்லிருளை நீக்கி இன்பமென்னும் இளவெயில்காயத் தோற்றினதோர் புண்ணிய சூரியன் என்னும்படித் தோன்றினவர். ஜனோபகாரமான அநேக சற்காரியங்களைச் செய்து கீர்த்திபெற்றவர். போரும்புடைப்புமே தொழிலாகக்கொண்டு எவ்வகைச் சாகசங்களுக்கும்

அஞ்சாத வீரர்களாகிய அப்கானியர் வம்சத்தில் ஜனித்தவராயினும் இவ்வரசர் யுத்தஞ் செய்து வெற்றிகொள்வதில் இஷ்டப்பட்டதில்லை. சாந்தமும் சமாதானமுமே மேலாக எண்ணினவர். தண்டெடுத்துச் சென்று இதரதேசங்களைக் கவர்ந்துகொள்ளவேண்டுமென்னும் ஆசை இவருக்குக் கொஞ்சமேனும் இல்லை. ஆசைக்கு அளவில்லையென்பதும், கோரின பொருள்களைப் பெறப்பெற ஆசை மேலிடுமேயன்றி ஒருபோதும் திருப்தியுண்டாகாதென்றும் இவர் நன்றாயறிந்தவராதலின் வீணாகத் துராசைகளில் மனசைப்போக்கித் துயர்ப்படாமல் தாம் பிரபுத்துவம் செய்து வந்த 37-வருஷகாலமும், தேசத்திலோரிடத்திலும் கலகங்கள் உண்டாகாமல் காத்துப் பல விதமான கைத்தொழில்களை விருத்திபண்ணுவதிலும் பற்பலவான சாஸ்திரச் சங்கங்களைக் கூட்டிவைப்பதிலும், வியவசாயத்தொழில் மேன்மேலும் விருத்தியடைதற்கு வேண்டிய காரியங்களைச் செய்விப்பதிலும், தன் பூர்வீகர்கள் எப்போதும் இடைவிடாமல் யுத்தமும் கலகமும் செய்து இடுக்கண் விளைத்ததனால் ஜனங்கள் இழந்துபோன சுகங்களைமறுபடியும் அவர்கள் முன்னிலும் அதிகமாகப்பெறச்செய்யும் வகைகளைத் தேடுவதிலுமே நோக்கமாக இருந்தனர்.

மேன்மை பொருந்திய இச்சக்ரவர்த்திதமது பிரஜைகளின் சுகாபிவிருத்தியின்பொருட்டு, அவர்களுக்குபயோகமாகக் கட்டுவித்த கோயில்களையும் வைத்து வளர்ப்பித்த தோட்டங்களையும், மான்யங்கள் கொடுத்து ஸ்தாபித்த பாடசாலைகளையும், இயற்றுவித்த சத்திரங்களையும் சாவடிகளையும், வைத்தியசாலைகளையும், கோரிகளையும், குளங்களையும்,50-கால்வாய்கள், 100-பாலங்கள், 150-கூபங்கள், ஆகிய சற்காரியங்களைப்பற்றி ஒவ்வொரு சரித்திரக்காரரும் மிகவும் பிரீதியோடு என்றும் புகழும்படியான நாசமில்லாத பெருங்கீர்த்தியைப் பெற்றனர்.

மகா விவேகியாகிய இச்சக்ரவர்த்தி செய்த சத்காரியங்கள் அவரோடு நசித்துப்போகவில்லை. எமுனாநதிக்கும் சாகார நதிக்கும் மத்தியில், அவ்விருநதிகளையும் ஒன்றோடொன்று சேர்த்து வெட்டுவித்த கால்வாயும், 'ஹிஸ்ஸார்', 'பிரூசபாத்' என்னும் இடங்களில் கட்டுவித்த அதிரமணியமான ஏழு பெரிய பாலங்களும், முற்றிலும் எரிந்து பாழாகிப் பாலைவனங்களான 'சர்ஹிந்து,' 'லுதியானா'வென்னும் இடங்கள் நன்றாக ஜலம் பாய்ந்து செழித்து விளையும்படி வெட்டுவித்த மிகப்பெரியவான கால்வாய்களும், இவர் ஆளுகையின் சிறப்பை எல்லாருக்கும் தெரிவிக்கும் நிரந்தரசாக்ஷிகளாகக் காணப்படுகின்றன. அக்காலத்தில் இவர் செய்வித்த ஜனோபகார காரியங்களுக்குச் சாக்ஷியாக அவற்றால் மிகச் செழிப்படைந்த பூமியும், குடிகள் மிகப்பெற்ற தேசமும் தவிர வேறொன்று வேண்டுமோ? இவருக்குப் பின்வந்த அரசர்களும் இவரைப் போலவே ஆண்டிருப்பாராயின் இப்போது இவ்விந்துதேசம் எவ்வளவு நல்ல நிலைமையை அடைந்திருக்கும்!

முற்காலத்தில் சொற்பமாக ஒருபோகமே பயிர்செய்துவந்த பல்லாயிரம் ஏகரா நிலங்கள் இவர் காலத்தில் இருபோகமும் அபரிமிதமாக விளைவனவாயின. அவ்விதமான நல்ல விளைவுகளாயினும் நல்ல துரைத்தனமாயினும் இல்லாத பல தேசங்களிலிருந்தும் இலக்ஷோப லக்ஷம் ஜனங்கள் பொன்விளையும் நாடான இத்தேயத்தில் நாளுக்கும் மிகுதியாகவந்து குடியேறினார்கள். இவர் வெட்டுவித்த பெரிய கால்வாய்களின் இரண்டு பக்கங்களிலும் கிராமங்கள் வரிசையாக ஏற்பட்டன. வயல் வெளிகளில் ஆடு மாடுகள் அளவில்லாமல் நெருங்கி மேய்வனவாயின. இம்மன்னர்தாம் வெட்டுவித்த கால்வாய்களால் செழிப்படைந்த நிலங்களில் விளைந்த விளைபொருள்களில் பத்தில் ஒருபங்கு மாத்திரமே நீர் வரியாக வாங்கிக் கொண்டனர். இப்பொருளையும்கூட தே

சோபகாரமான காரியங்களுக்கே உபயோகப் படுத்தினர். துருக்கர்கள் புதிதாக ஐரோப்பா கண்டத்தில் பிரவேசித்த அக்காலத்தில் இத்தேயத்தில்ஏகச்சத்திராதிபதியாய் அரசுபுரிந்து வந்த இவ்வரசர் மற்ற இராஜாக்களெல்லாம் தம் வழியைப்பிடித்து நடக்கும்படி ஜனோபகாரத்தின் மகிமையும் நன்மையான செங்கோலின் முறைமையும் இப்படிப்பட்டவையென்று தாம் அவலம்பித்துக்காட்டினர்.

இவர் இறந்துபோகும்போது இவருக்கு வயது தொண்ணூறு. இவர் மேலே விவரித்த நற்காரியங்களைச் செய்ததேயன்றி டில்லி நகருக்குச் சமீபத்தில் 'பிருஸ்பாத்' என்று தம் பேரால் புதியதோர் நகரும் கட்டுவித்தனர். அன்றியும் அநேக குற்றங்களுக்கு ஏற்பட்டிருந்த கொலைத் தண்டனையைமாற்றி வேறு இலகுவான தண்டனைகள் ஏற்படுத்தினர். வரிகளை வசூல்செய்யும் உத்யோகஸ்தர்கள் அக்கிரமமாக ஜனங்களை நெருக்கிக் கடும்வரிகொள்ளாமல் வரிகளை இவ்வளவென்று வரையறுத்து நிர்ணயித்தனர். கைகால்களைக் குறைத்து அங்கவீனம்செய்வதைச் சில குற்றங்களுக்குரிய தண்டனையாக மகம்மதீயசட்டங்கள் விதித்தபோதினும், அத்தண்டனைகள் மிக்க கொடியவாதலின் அவற்றைக் கூடாதென்று விலக்கினர். இவரது ஜனோபகாரமான பூபரிபாலத்தின் மகிமை நெடுந்தூரம் பரவி அக்காலத்தே மகம்மதிய சக்ரவர்த்தியாய் துருக்கி தேசத்தில் ஆண்டுவந்த காலிப் என்பவர் இவருக்கு பெருமையாக ஆடைகளையும் உபசார கடிதங்களையும் அனுப்பி இவரது பெருமையையும் நன்மையையும் உவந்துகொண்டனர்.

இவர் தமது ஆளுகையைப்பற்றித் தாமே எழுதிவைத்த சில சாசனங்கள் இருக்கின்றன. அவற்றில் பின்வருவது நாமெல்லோரும் படிக்கத்தக்கது.

“சொற்பக்காரியங்களுக்காக மகம்மதீயர்களின் இரத்தத்தைச் சிந்துதலும், அற்பக்குற்றங்களுக்காகக் கை கால்களைக் குறைத்து, கொரமாக ஒறுத்துக், காதை மூக்கை அறுத்து, கண்ணைக்கெடுத்து, உயிரோடிருப்பவர்களைப் பெரும் குண்டுக்கற்களைக்கட்டி யுருட்டி எலும்புகளை முறித்துப்பொடித்து, உடலை நெருப்பாற் சொளுத்திச், சிலுவையிலறைந்து கொன்று, நகக்கண்களைப்பெயர்த்து, உயிரோடு தோலையுரித்து, சாட்டைகளாலடித்துக் கண்டதுண்டமாக உடலை நறுக்கிச் சித்திரவதை செய்து தண்டித்தல் முற்காலத்தில் வழக்கமாயிருந்தது. தமது பேரருளாலே என்னை அரசனுக்க உளம்புரிந்த கடவுள் இக்கொடிய வழக்கங்களை மாற்றி நன்மையைச் செய்ய வேண்டுமென்னும் ஆசையையும் எண்ணத்தையும் எனக்குக் கொடுத்திருக்கின்றார். அன்றியும், தினந்தோறும் ஆலயங்களில் எனக்கும் என் ராஜவம்சத்தாருக்கும் நன்மை யுண்டாகச் செய்யும் பிரார்த்தனைகளில், இனிமேல் எனக்கு முன் இந்த டில்லி ராஜ்பத்தை ஆண்டுவந்த அரசர்கள் பெயரையும், அவ்விதமாகக் கடவுளுக்கு அவர்மேலுள்ள கோபத்தை ஒருவாறு தணிவித்து அவரது கருணைக்குப் பாத்திரராக்கக் கருதிச்சேர்த்துப் பிரார்த்திக்கச் செய்ய வேண்டுமென்று தீர்மானிக்கிறேன். சில்லரை வியாபாரிகளால் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குக் கொடுத்துவரப்படும் சில வெறுப்பான வரிகளையும், சர்க்கார் புறம்போக்கு நிலங்களில் ஆடு மாடுகளை மேய்ப்பதற்காக இடையர்கள் பெற்றுக்கொள்ளவேண்டிய அநுமதிப்பத்திரங்களையும், பூ விற்பவர், மீன் விற்பவர், பருத்தி ஆய்பவர், சமைபற்காரர், இவர்களுக்கிடப்பட்ட வரிகளையும், சில்லரைக்கடைக்காரர்கள், மது விற்பவர், இவர்களுக்கிடப்பட்ட தீர்வைகளையும், இனிமேல் தள்ளிவிடும்படி இதனல் உத்தரவுசெய்கின்றேன். இவ்விதமான வரிகளை, வசூல்செய்வோர் இஷ்டத்தைப் பொறுத்தவாகவிட்டு அதனல் ஜனங்களுக்கு அநேக நிர்ப்பந்தங்களை யுண்டாக்கி வசூல் செய்வதைப்பார்க்கிலும், அவற்றை முற்றிலும் இழத்தலே நலமாகும். அன்றியும் இனிமேல் சட்டபுஸ்தகங்களில் வியக்தமாகக் கண்டவரிகளை யன்றி மற்றொரு வகையான வரிகளும் வாங்கப்படமாட்டா. உயுத்தத்தில் அபகரிக்கப்பட்ட பொருள்களில் ஐந்தி லொருபாகம் போர்ச்சேவகர்க்கென்றும், மற்ற நான்குபாகமும் துரைத்தனத்தாருக்கென்றும், ஒரு ஏற்

பாடு நெடுநாளாய் வழங்கிவருகிறது. இனிமேல் அப்பொருள்களில் நான்குபாகம் சேவகர்களுக்கும், ஒரு பாகம் மாத்திரமே அரசனுக்கென்றும், நான் உத்தரவுசெய்கின்றேன். பின்வரும் குற்றங்களைச் செய்பவர்களை இராஜ்யத்தில் இருந்து துரத்தும்படிச் செய்வேன். அவர் யாவரென்னில்: தெய்வத்தை ஒப்புக்கொள்ளாத நாஸ்திகர்கள், துர்மார்க்கங்களைப் பழக்கிவைப்பவர், கைக்கூலி வாங்கும் உத்தியோகஸ்தர்கள், கைக்கூலி கொடுப்பவர்கள் என்பவர்களாம். எனது பிரஜைகள் என்னைக்கண்டு பழகும்படி டாம்பீகமான பட்டுடைகளையும் ஆபரணங்களையும் தரிப்பதில்லை யென்று தீர்மானித்தேன். வழிப்போக்கர்களுக்கு ஏற்படுத்தப்பட்ட சத்திரங்கள், மசூதிகள், கிணறுகள், தடாகங்கள், வாய்க்கால்கள், கால்வாய்கள், வைத்தியசாலைகள், தர்மசத்திரங்கள், பாடசாலைகள் முதலாக ஜனோபகாரமாக என் முன்னோர்களால் செய்விக்கப்பட்ட ஒவ்வொரு கட்டடத்தையும் பழுதுபார்த்துப் புதுப்பிக்கக்கருதி அவற்றின் செலவுகளுக்கும் வரிகளிலிருந்து ஒரு வீதம் ஏற்படுத்தியிருக்கின்றேன். அன்றியும் எனக்குமுன் அரசுபுரிந்த மகமது டோக்ளாக் கென்பவரின் அக்கிரமத்தண்டனைகளால் இறந்துபோனவர்களின் பந்துக்களைக் கண்டு பிடித்து, அவர்களுக்கு உபகாரச்சம்பளங்கள் கொடுத்து அவ்வரசனை முற்றிலும் மன்னிக்கும்படிச்செய்து, அவர்கள் அவ்வாறு செய்ததைத் தக்க சாக்ஷிகளோடு பத்திரங்களில் எழுதுவித்து அவற்றையெல்லாம் எனக்குக் கிடைத்தவரையில் சேர்த்து ஒரு பெட்டியில் போட்டுப் பூட்டி அவ்வரசன் கல்லறைக்குள்ளே புதைத்துவைக்கும்படிக் கட்டளையிட்டேன். என்னுடைய இராஜ்யத்தில் உள்ள கல்விமான்கள் புண்ணியவான்களாகிய பெரியோர்களையெல்லாம் சென்று கண்டு அவர் அனுக்கிரகத்தைப்பெற்று அவர்களைக் காப்பாற்றி வருகின்றேன். என் இராணுவவீரர்களில் எவரேனும் வயோதிகத்தாலாவது காயங்களாலாவது வேலைசெய்வதற்கு அருகமில்லாதவரானபோது, ஜீவபரியந்தம் அவர்களுக்கு முழுச்சம்பளமும் உபகாரார்த்தமாகக் கொடுக்கும்படித் திட்டஞ்செய்திருக்கிறேன். என்னைக் கொல்லுதற்கு இருமுறை பிரயத்தனப்பட்டார்கள் ஆயினும் பலிக்கவில்லை."

## THE SCENERY OF THE CAUVERY.
## காவேரி நதியின் அழகிய காட்சி.

### I

காவேரி நதியைப்பார்க்கிலும் பரிசுத்தமான நதி இவ்விந்துதேசத்தில் வேறேயில்லை. மலைநாடாகிய குடகுதேசத்தில் இதன் உற்பத்திஸ்தானத்திலிருந்து தீபகற்பத்தைக் கடந்து நெடுந்தூரம்சென்று, எண்ணிறந்த கிளைகளாகப்பிரிந்து, திரிச்சிராப்பள்ளி, தஞ்சாவூர் என்னும் ஜில்லாக்களைச் செழிப்பித்து, வரையாது வழங்கி வறுமையடைந்த வள்ளலார்போல ஒடுங்கிச்சுருங்கி வங்காளக்கடலில் சங்கமமாகும் வரையிலும் ஓரிடம் ஒழியாமல் இதன் மகிமை கொண்டாடப்படும்.

இந்தக்குடகு நாடானது மைசூர் ராஜ்யத்துக்கு மேற்புறத்தில் மலைகளின் மத்தியில் உள்ள ஒரு சிறு தேசம். இதில் பிரமகிரி யென்று உயர்ந்தமலை யொன்று இருக்கின்றது. இம்மலை சமுத்திரமட்டத்துக்கு 5000-அடி மேலுயர்ந்திருக்கின்றது. இம்மலையின்மேல் நவம்பர் மாதத்தில் காலைவேளையில் மப்புமந்தாரம் இல்லாதபோது நின்று நோக்கினல் நாற்புறமும் காணப்படும் காட்சி வெகு மனோகரமாயிருக்கும். கண்ணுக்கெட்டியவரையிலும் புல்லும் மரமும் அடர்ந்துவளர்ந்த காடுகள் நெருங்கிய குன்றுகள் அநேகம் காணப்படும். இக்குன்றுகள் சிற்சில விடங்களில் அலைகள்போல மட்டமாக உயர்ந்தும் சிலவிடங்களில் கூரிய கொடுமுடிகளாக ஓங்கியும் இருக்கும். மேற்புறத்தில் நெடுந்தூரத்துக்கப்பால் கருநீலம் பாய்ந்த இந்துமகா சமுத்திரம் ஒளிபொருந்திய வளைந்த அநேக ஆறுகள் பாயும் அகன்ற பிரதேசத்துக்கப்புறம் கண்ணுக்குத் தோன்றும்.

மேலேகூறிய பிரமகிரியின் உச்சியில் தலைக்காவேரி யென்னும் ஓரிடத்தில் காவேரிநதி

முதலில்ஓர் சிற்றருவியாக உற்பத்தியாகின்றது. அங்கு இது இருண்ட குகையினின்றாயினும் உறைந்த பனிக்குகையினின்றாயினும் உற்பத்தியாகிறதில்லை. பசியமலைப்பக்கத்தில் நின்றுண்டாகி, அடியில் ஒரு கற்றொட்டியில் வீழ்ந்து, அங்கு நின்று மூன்றடியாழமும் முப்பதடி சமசதுரமுமான ஓர் தடாகத்திற் பாய்கின்றது. இக்கற்றொட்டிக்கு மேலே ஒரு சிறிய கோயில் உள்ளது. இங்கு நின்று ஒரு வாய்க்கால் வழியே நீர் வெளியே செல்லுகின்றது. இது தான் இந்நதியின் உற்பத்தி.

வருஷந்தோறும் அக்டோபர் மாதத்தில் இந்த மகா பரிசுத்தமாகிய ஸ்தலத்தில் ஒரு உற்சவம் நடத்தப்படும். அவ்வுற்சவத்துக்கு எண்ணிறந்த ஜனங்கள்வந்து கூடுவார்கள். குடகு தேசத்தில், ஒவ்வொரு வீட்டாரிலும் ஒன்றிரண்டுபேருக்குக் குறையாமல் வருவதன்றி, மைசூர், கன்னடம், மலையாளம் முதலிய தேசங்களிலிருந்தும் ஜனங்கள் ஆயிரக்கணக்காய் வருவார்கள். இவர்கள் சிங்காரமான உடைகள் தரித்து கும்பல் கும்பலாய்ப் பற்பல பாதைகளூடே மலைச்சார்புகளில் ஏறிச் செல்வதைக்காண வெகு விசித்திரமா யிருக்கும். பாட்டும் ராகமும் எங்கு பார்த்தாலும் ஒலித்துக்கொண்டே யிருக்கும். இது உற்சவம்கொண்டு உவக்கும் காலமாதலால் இக்காலத்தில் மழைகள் நீங்கித் தாழ்வரைகளில் நெற்பயிர்கள் விளைந்து கதிர்முற்றிக், காடுகளும் குன்றுகளும் செழித்துத்தளிர்த்து பச்சென்று காந்தியோடு விளங்கிக்கொண்டிருக்கும்.

இக்குடகு நாட்டார் மிக்க தைரியமும் சுறுசுறுப்புமுள்ள ஜனங்கள். பார்வைக்கு உயர்ந்து அழகாயிருப்பார்கள். பெண்கள் அநேகமாகச் செகப்பாயும் அழகாயும் ஓங்கிவளர்ந்து மிருப்பார்கள். இவர்கள் தம் நாட்டை வெகு ஆவலோடு நேசித்து உலகிலுள்ள மற்றெத்தேசத்திலும் அதைச் சிறந்ததாகச் சிலாகித்துக் கொள்வார்கள்.

இவர்கள் எப்போதும் பாடிக்கொண்டேயிருப்பவர்கள். இவர்களுக்குள்ளே ஒவ்வொரு பிரகிருதத்துக்கும் ஒவ்வொரு பாட்டு ஏற்பட்டிருக்கும். அப்பாடல்களில் அநேகம் பின் வருமாறு ஆரம்பிக்கும்.

> "பெயர்மலி சம்புப்பெருந்தீவதனில்
> செயன் மலிவளனுறுதிருவளர் நாடுகள்
> பற்பலவுள்ள அற்புதமானவை;
> அன்னறவற்றெல்லாம் துன்னியவரைகளில்
> பொன்மலைபோலவும், நன்மலர் பூத்துப்
> பொதுளியகாவிடைமதுமலிசண்பகப்
> புதுமலர் போலவும், பொலிந்திடுமாங்கே,
> முத்துநன்மாலிகை முழுவனப்பதனை
> ஒத்திடும் குடகெனு மொண்ணுடதுவே;
> ஆயவர் நாட்டில் அமர்ந்தனை நண்ப
> நேய மோடுவாழ்குக நெடிதே."

இந்த உற்பத்தி ஸ்தானத்திலிருந்து காவேரியாறு குடகு நாடூடே முப்பது மைல்தூரம் இருகரைகளிலும் ஓங்கிவளர்ந்த பொழில்களின் வழியே வளைந்துசென்று அநேக உபநதிகளைப்பெற்று மைசூர் நாட்டின் எல்லையை அடையுமுன் ஓர் பெரிய ஆறுகப் பெருகுகின்றது. ஸ்ரீரங்கப்பட்டணத்தை அடையும் காலையில் அது அகன்று பரந்த பெருநதியாகப் பிரவாகித்து அத்தீவைச்சூழ்ந்து கற்களும் பாறைகளும் செறிந்த அடித்தரையூடே கிழித்துச் செல்லுகின்றது.

இச் சீரங்கபட்டணத்தீவில் உள்ள கோட்டை ஹிந்து சரித்திரத்தில் அங்கிலேயர் வெற்றிகளில் மிகவும் பேர்போனது. இது சிறிதும் ஒழுங்கில்லாமல் அமைக்கப்பட்டுள்ளது. இதன் மதில்கள் மிகவுயர்ந்திருப்பினும் பார்வைக்கு அந்தமும் தோற்றமும் இல்லாமலிருக்கும். அக்காலத்தில் அங்கிலேயர் இடித்துப்புகுந்த அபாயமான மதிற்சந்து, அநேகம் போர்வீரர்கள் சமர்புரிந் துயிர்துறந்த வன்றைப்போலவே இன்றும் உள்ளது. உள்மதிலில் திப்புசுல்தான் அன்று கடும்புலிபோல வீராவேசங்கொண்டு போர்செய்து மடிந்து பிணக்குவியலில் புதைந்துகிடந்ததாகிய குறுகிய திப்பு

சுல்தான் வாசல் இன்னும் அப்படியே யிருக்கின்றது. அவனை அன்று கொன்றவன் இன்னுனென்று ஒருவரும் அறியார்கள். அவன் குரூரனும் தயையில்லாதவனும் வஞ்சகனுமானுலும் கடைசியில் அரசனைப்போலவும் வீரனைப்போலவும் போர்செய்து மரண மடைந்தான். இக்கோட்டைக்கு ஒன்றரைமைல்தூரத்தில்ஏகாந்தமான ஒரு தோட்டமிருக்கின்றது. இத்தோட்டத்தில் இருபுறமும் ஓங்கிவளர்ந்தமரங்களுக்கிடையே ஓர் பாதை செல்லுகின்றது. அப்பாதைவழியாகச் சென்ருல் பளபளவென்று கண்ணைப் பறிக்கின்ற வெண்ணிறமான கோபுரங்களும் ஸ்தூபிகளுமாகச் சிரித்துச் சிங்காரிக்கப்பட்ட எண்கோணுகிருதியான ஒரு உயர்ந்த சமாதி மண்டபம் காணப்படும். இதைச் சுற்றிலும் வழவழவென்று இழைத்த கருஞ் சலவைக்கற் கம்பங்கள் நிறுத்திய தாழ்வாரம் ஒன்றும் உள்ளது. இம்மண்டபத்தின் மூன்று பக்கங்களிலும் அழுத்தமான கருங்காலிமரத்தாற் செய்யப்பட்டுத் தந்தமிழைத்த ஓங்கியுயர்ந்த இரட்டைக்கதவுகளும் கண்ணுடிபோலப் பளபள வென்று பிரகாசிக்கின்ற கருஞ்சலவைக்கற்களால் அமைக்கப்பட்ட வாயில்களும் உள்ளன. இவ்வாயில்களில் ஒன்றினூடே உள்ளேநோக்கின் அம்மண்டபத்தின் மத்தியில் ஒன்றின் பக்கத்திலொன்ருய் மூன்று கோரிகள் காணப்படும். இவற்றுள் ஹைதராலியும் அவன் மனைவியும் அவன் மகனுகிய திப்புசுல்தானும் கிடந்து உறங்குகின்றனர். திப்புவின் சமாதி பூக்கள்போட்ட விலையுயர்ந்த பட்டினுலும் மற்றவை யிரண்டும் பொற்சரிகையிட்ட செகப்புப்பட்டாலும் மூடப்பட்டுள்ளன.

இங்கிருந்து சுமார் நாற்பது மைல் அளவும் காவேரி நதி நன்ருகப் பயிர்செய்யப்பட்டுக் குளங்களும் நகர்களும், கிராமங்களும் அங்கங்கே அமையப்பெற்ற சமநிலங்களினூடே பாய்ந்து, கடைசியில் மைசூர் நாட்டுக்கும் கோடை வெயிலால்தபிக்கும் பள்ளநிலங்களாகிய கர்நாடக தேசத்துக்கும் நடுவில் உள்ள மலைப்பிரதேசத்தை யடைகின்றது. இங்கு இந்நதிகால் மயில் அகலமுள்ளதாய் இரண்டு கிளைகளாகப் பிரிந்து சிவசமுத்திரம் என்னும் தீவைச்சுற்றி யோடுகின்றது. இத்தீவில் ஒரு நகரமும் புராதனமான பிரசித்திபெற்ற கோயிலும் இருக்கின்றன.

இந்த ஆறு அதிவேகமாய்ப் பாய்தலினுலும் ஆற்றின் அடித்தரை மேடும் பள்ளமுமாயிருத்தலினுலும் அதைத் தாண்டி இத்தீவைப்பகைவர்கள் அடுப்பது பிரயாசமாகும். இதன் தலைப்பக்கத்தில் இந்நதியின் இரண்டு கிளைகளையும் கடந்து செல்ல வெகு விசித்திரமானவையும் இந்துக்கள் கைப்பாடென்று எளிதில் தெரிந்துகொள்ளத் தக்கவையுமான பாலங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. நதியின் அடித்தரையில் அங்கும் இங்கும் சிதறிக் கிடக்கும் பாறைகளின்மீது சதுரமான அடிகள் வைத்த உருண்ட கம்பங்கள் இணையிணையாக நிறுத்தப்பட்டு அவற்றின்மேல் குறுக்காக உத்திரங்கள் பாய்ச்சி அவ்வுத்திரங்கள் மேல் பாதையொன்று அமைக்கப்பட்டுள்ளது. இவ்வாறு இணையிணையாக நிறுத்தப்பட்ட கம்பங்கள் ஐந்நூறு சோடுகளுக்கு மேலே யுள்ளன. அஸ்திபாரம் பலமாயிருத்தல் இன்றி யமையாததலாலும், பாறைகள் தொடர்ந்து நில்லாமல் பிரிந்து நிற்றலினுலும் எங்கெங்கே அடிப்பலம் கொடுக்குமோ அவ் வழியாக இப்பாலம் கோணி நெளிந்து போயிருக்கின்றது. இப்பாலத்தைச் சிற்பநூலார் கண்டு திருப்தி யடையமாட்டார்களாயினும் மற்றவர்களுக்கு இதன் வளைவும் வடிவும் வெகு நேர்த்தியாயிருக்கும். இப்பாலத்தின்மீது இருபுறமும் நுழைகள் அழைத்த கைபிடிச்சுவர்கள் கட்டப்பட்டிருக்கின்றன. இதன் மீது வண்டிகள் அபாயமின்றிச் செல்லக்கூடும். பாம்பு நெளிதல்போலக் கோணிச்செல்லும் இப்பாலத்தில் இந்துக்களுக்கு விசித்திரமாகத் தோற்றுவது ஒன்றும் இல்லை; நதி வளைந்து செல்லும்போது அதன்மேற் செல்லும் பாலமும் ஏன் வளைந்திருக்கக்கூடாது என்பார்கள்.

இப்பாலத்துக்கு ஒருமைல் கீழாகக் காவேரி நதி மேட்டில் நின்று பள்ளத்தில் விழுகின்றது. இங்குதான் பள்ள நிலங்களை அடைதற்கு இந்நதி முதல் முதல் கீழ்நோக்கி அடியெடுத்து வைக்கின்றது. இத்தீவின் இருபக்கத்திலும் இந்நதியின் இரண்டு கிளைகளிலும் ஒவ்வொரு வீழ்ச்சி யிருக்கின்றது. வடகிளையிலுள்ள வீழ்ச்சிதான் மிகவும் பயங்கரமானது. இத்தீவு ஒருவரையும் அண்டவொட்டாமல் துரத்தியடித்து அதைக் காத்துக்கொண்டிருக்கும் ஒரு பூதத்தின் சாபத்தை யடைந்திருக்கிறதென்றும் இங்கு அநேகம் கோரமான கொலைகள் நடந்திருக்கின்றனவென்றும் சொல்லுவதற்கேற்ப இக்காட்சி பார்ப்பவர்களுக்கு மிக்க பயங்கரமாயிருக்கும்.

இந்த நின்று ஐம்பதுமைல் வரையில் ஊளையிடும் காடென்று உண்மையில் சொல்லத்தக்கதும், மலைகளின் அழகு சிறிதும் இல்லாமல் வறண்டு வற்றிக் கல்லும் கறடுமாய் விஷஜ்வரத்துக்கு இருப்பிடமாயுள்ளதுமான முட்செடிகள் வளர்ந்த காடுகளால் மூடப்பட்ட பயங்கரமான மலைப் பிரதேசத்தூடே இந்நதி கிழக்கு நோக்கிச்செல்லுகின்றது. இப்பிரதேசத்தில் ஆழ்ந்த குழிகளில் அங்கங்கே சிறிது ஜலம் காணப்பட்டு அவ்விடங்களில் புல்லும் புதரும் உயர்ந்து நெருங்கிவளர்ந்திருக்கும். இந்தகோரமான பிரதேசம் பாலைவனம்போலத் தீய்ந்து மடிந்து கிடப்பினும் இங்கு பெருங்காடுகளிலும் அதிகமாக விலங்குகள் நெருங்கியிருக்கும். பலவகையான மானினங்கள் நிச்சத்தமான புதர்களுக்கிடையே அலைந்துதிரியும். இவற்றிற்குச் சமீபமாகவே பயங்கரமான அழகைப் பிடித்து அமைத்ததுபோல உருவமைந்த சிறுத்தைப்புலிகளும் வேங்கைப் புலிகளும் பதுங்கியிருக்கும்.

இந்த அபாயமும் பயங்கரமுமான பிரதேசத்தின் வழியே, இருபுறமும் கரைகள் இருநூறு முந்நூறடி செங்குத்தாக உயர்ந்திருக்க ஒரு குறுகிய பள்ளத்தாக்கினிடையே இந்நதி செல்லுகின்றது. இங்கு இருபுறமும் நெடுந்தூரத்துக்கு மனிதர்கள் சஞ்சரிக்கும் பாதைகளாவது கிராமங்களாவது இல்லாமையினாலே இந்நதியின் இப்பாகத்தை ஜனங்கள் இலகுவில் கண்டுபிடிக்க முடியாது. பூமி காடுகரம்புகள் நீங்கி வெட்டவெளியாகத் தோன்றுகின்ற இடங்களில் மனிதசஞ்சாரமும் வீடுகளும் காணப்படும். தென்பக்கத்தில் காடுகள் கறைந்து விளைநிலங்கள் காணப்படுகின்றதனால் அங்கு குதிரைகளையும் எருது மாடுகளையும் மாத்திரமே கொண்டு செல்லக்கூடிய ஒரு குறும்பாதை போகின்றது. இது மலைநாட்டுக்கும் கீழ்நாட்டுக்கும் இன்றைக்கும் போக்குவரவு செய்தற்கு முக்கியமான வழியாயிருக்கின்றது.

முன்னொருகாலத்தில் ஒருவாறு ஜனவடர்த்தியுள்ளதும் உழுது பயிரிடப்பட்டதுமாயிருந்த பிரதேசத்தின் வழியே இந்நதியைத் தொடர்ந்து இருபதுமைல்தூரம் செல்லின் காவேரிபுரம் கணவாய்க்கு வந்து சேரலாம். இது ஒருகாலத்தில் இந்தமலைப்பிரதேசத்துக்கும் கீழ்நாடுகளுக்கும் இடையில் உள்ள இரண்டு மூன்றுவழிகளில் ஒன்றாய்ப் பிரசித்தி பெற்றிருந்தது. இந்தமலைக்கணவாயின் ஆரம்பத்தில் முன்னேயிருந்த கிராமத்தின் சேஷமாக இப்போதுள்ளது ஒரு பெரியகோயில் ஒன்றுதான். இதன் கற்கம்பங்கள் நிறுத்திய விசாலமாகிய புறந்திண்ணை இப்போதும் பிரயாணிகளுக்குத் தங்கும் சாவடியாக உபயோகப்படுகின்றது.

நம்வழியைத் தொடர்ந்து முன்னோக்கிச் செல்லின் கணவாய்க்கு வந்து சேருவோம். இக்கணவாய் செங்குத்தாய் மரம்செடியற்றுப் பயங்கரமான குன்றுகளுக்கு மத்தியில் பதினெட்டுமைல்தூரம் படிப்படியாக இறங்கிக்

கடைசியில் காவேரியில் வந்து முடிகின்றது. இதன் ஓரமாக ஒரு சிறு அருவி ஓடுகின்றது. மேற்கூறிய பாதை இவ்வருவியைத் தொடர்ந்து சென்று இவ்வருவியின் அடித்தறையை ஒன்பதுதரத்துக்குக் குறையாமல் கடக்கின்றது.

இங்கு ஒரு மேட்டு நிலத்தில் நின்று பார்த்தால் இம்மகாநதி இருகரைகளிலும் மரங்கள் நெருங்கிப் பசுமையாகிய பள்ளத்தாக்கின் வழியாகத் தெற்குமுகமாகத் தகதகவென்று ஒளி வீசிக்கொண்டு வருவதைக் காணலாகும். இப்பள்ளத்தாக்கின் இருபக்கங்களிலும் மலைத்தொடர்கள் சுவரெடுத்ததுபோல நிற்கின்றன. மேல்புறத்தில் காவேரிபுரம் கணவாய் இத்தொடர்களுக்கு மத்தியில் பரவியிருக்கின்றது.

இவ்விடத்தில் இந்நதி தான் நெடுந்தூரம் திரிந்துவந்த மலைநாடுகளைக்கடைசியாக விட்டு நீங்கித் தென் முகமாகத்திரும்பி நாற்பதுமைல் தூரம் ஒரேபார்வையாக இருபுறமும் வெள்ளம் கரைபுரள அகன்று ஓடுகின்றது. ஆயினும் இதன் இருபுறமுமுள்ள பிரதேசங்கள் இன்னம் விளைவின்றிக் கல்லும் கறடுமாயே உள்ளன. இதன்கரைகளும் நீரேறிப்பாய வொண்ணாதபடி உயர்ந்திருக்கின்றன. இங்கு இந்நதியிடையே மரங்கள் நெருங்கிவளர்ந்த மூன்று நான்கு தீவுகள் இருக்கின்றன. ஜூன், ஜூலை, ஆகஸ்டுமாதங்களில் நதியில் பிரவாகம் பூரணமாகி இத்தீவுகளைச்சுற்றி ஜலம் அதிவேகமாக ஓடிக்கொண்டிருக்கும் சமயத்தில் எண்ணிறந்த நீர்ப்பறவைகள் முட்டையிட்டுக் குஞ்சு பொரித்தற்கு இங்குவந்து சேரும். மரங்கள் எல்லாம் இப்பறவைகளின் கூடுகளால் நிறைந்துபோகும். பலவகையான கொக்குகளும் நாரைகளும் தமது அகன்ற சிறகுகளை விரித்துக்கொண்டு இடைவிடாமல் வட்டமிட்டுக் கொண்டிருக்கவாயினும், அல்லது மரங்களின் உச்சியில் வரிசை வரிசையாக விசித்திரமாக உட்கார்ந்திருக்க வாயினும் நூற்றுக்கணக்காகக் காணப்படும்.

இங்கு நின்று இந்நதி மேனோக்கிச்சென்று பவானி யென்னும் ஊருக்கருகில் நீலகிரி மலையிலிருந்து வருகின்றதும் பவானியென்னும் அவ்வூரின் பெயரையே கொண்டதுமான பெரிய உபநதி யொன்றைப் பெறுகின்றது. அவ்விரண்டு நதியின் சங்கமத்துக்கு நடுவே ஒரு பட்டணம் இருக்கின்றது. இங்கு சங்கமத்துக்குச் சற்று மேலாக அநேகம் கண்களுள்ள இரண்டு பெரிய பாலங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. இதற்குச் சிறிது தூரத்துக்கப்பால் 'ஈரோட'ண்டையில் இந்நதிமேல் இருப்புப்பாதைப் பாலமொன்று செல்லுகின்றது. இங்கு ஒரு பெரிய ரெயில் ஸ்டேஷனும் அநேக வேலைகளும், கட்டடங்களும் இந்துக்களுடைய தூங்கற்றனத்துக்கு எதிரிடையாக ஐரோப்பியரது பெருமுயற்சியானது இன்னதென்று விளங்கச் செய்வதுபோல அடியும் இடியும் ஓசையும் பூசலுமாகக் காணப்படும். போகப் போகப் பிரவாகம் பொங்கி அகலமும் பெருகிக் கொண்டு ஐம்பது மைல்தூரம் முன்னோக்கி விரைந்து புரண்டோடுகின்றது. கிழக்கு நோக்கிச் செல்லச்செல்ல இருபுறமும் சுபிக்ஷமான விளைவயல்களும் தோப்புகளுமாய் வெகு அலங்காரமாயிருக்கும். கருவூரைச் சாரும் போது இந்நதி ஒருமைல் அகலமுள்ளதாய் ஆனைகள் சஞ்சரிக்கும் ஆனைமலைகளிலிருந்தும் வருகின்ற அமராவதி யென்னும் உபநதியைப் பெறுகின்றது. இவ்விரண்டு நதிகளின் சங்கமத்துக்கு மத்தியிலுள்ள பிரதேசம் ஆற்றின் அடித்தறையினின்று அடித்தொதுக்கப்பட்ட மணற்குன்றுகளால் மூடப்பட்டுள்ளது. இந்த அலைபோலெழுந்த மணற்குன்றுகள் அடிக்கடி இடம்பெயர்ந்து தென்மேற்குக் காற்றடிக்கும் போது முன்னோக்கிச் சென்றும் வடகிழக்குக் காற்றடிக்கையில் பின்னிடைந்தும் இருக்கும். இவை அநேக வயல்களையும் வேலிகளையும் மூடியதுமல்லாமல் ஒரு காலத்தில் ஒரு கோயிலையும் உட்புதைத்து விட்டன. இக்கோயிலின் மேற்கூரையின் ஒரு பாகமும் கோபுரமும் மாத்திரமே இப்போது இம்மேடுகளுக்குமேல் தெரிகின்றன. பனைகளும் தெங்குகளும் பாதிக்குமேல் புதைந்துபோயிருக்கின்றன

(இன்னும் வரும்.)

## THE PRINCIPLE AND METHOD OF TEACHING CHILDREN,
## பாலபோத சாதக சாதனு முறை.

A REVIEW OF THE NEW "TAMIL INFANT PRIMER"

BY

S. G. DANIEL B.A., *

பாலர்களுக்குப் போதிப்பதில் அவர்கள் மனமறிந்து போதிக்கும் திறமை ஆசானுக்கு இருக்கவேண்டியது அவசியம், அத்திறமை யில்லாவிட்டால் அவர்களுக்குப் போதிக்கும் சக்தி ஆசானுக்கு உண்டாகமாட்டாது.

போதனை யென்பது புத்தியின் கற்பனை. "கற்றதோர் கல்வியும் மனப் பழக்கம்" என்ற தனால் மனப்பழக்கமின்றி கல்வியில்லை. "மனப் பழக்கம் என்றால் என்ன?" என்கிற கேள்வி பிறக்கலாமே. அதையும் விளங்கக் கூறு வோம்.

மனம் சங்கல்ப-விகல்ப ரூபமாயிருப்பது: அப்படியென்றால், நினைத்தலும் மறத்தலுமே தொழிலாயுள்ளது. இந்தத் தொழிலில் அதைப் பழக்குவதாவது எப்படியென்று கேட்க லாம். அதை ஒரு உதாரணத்தால் விளக்கு வோம். ஏன் எனில் மனம் சூக்ஷ்மரூபமுடைய தா லும் அதன் தொழிலைக் கவனித்து அறிவது ஸ்தூலபாவனையில் தானே பழகினவர்களுக்கு கஷ்டசாத்தியமா யிருக்குமாதலாலுமென்க.

மனதுக்கு பதிலாக குதிரையைப் பழக்கு வதை யெடுத்துக் கொள்ளுவோம். அதற்கு ஓடுவதும் நிற்பதும் சுபாவமான தொழில். குதி ரையைப் பழக்குவதாவது, அது மனிதன் இஷ் டப்படி ஓடவும் நிற்கவும் பழக்குதலாம். அப் பொழுதுதான் அது சவாரிக்கு யோக்கியமான தாகும். குதிரை அதற்குத் தோன்றியபடி ஓடு வதும் நிற்பதுமாயிருந்தால் சவாரி செய்வோன் பாடு திண்டாட்டமாகத்தான் முடியும். ஏனெ னில் திடீரென்று ஒன்றைக்கண்டு மருண்டு ஓடும். மறுபடியும் திடீரென்று தானே மற் றொன்றைக் கண்டு நின்று விடும். இப்படி திடீ ரென்று ஓடுவதாலும் திடீரென்று நிற்பதாலும் சவாரி செய்வோனுக்கு ஆபத்து விளையுமென் பது நிச்சயம். அதை சவாரி செய்வோன் இஷ் டத்துக்கிசைந்து ஓடவும் நிற்கவும் பயிற்றுவது தானே அதைப் பழக்குதலாகும். அதே மா திரியாக நினைத்தலும் மறத்தலுமே சுபாவமாக வமைந்துள்ள மனதை தான்தோன்றியாக அதுவிஷயங்களைப் பற்றி ஓடவிடாமல் "இஷ் டம்" என்கிற மனச்சாட்சியின் சக்திக்கு அட ங்கி நடக்கப் பழக்குதல் தானே மனப்பழக்க மாம்.

குதிரைக்குக் கடிவாளமும் லகானும் எப் படியோ அப்படி மனதைப் பிடித்துப் பழக்கக் கவனமும் மனனமும் சாதனங்களாகும். கவ னம்—என்பது குறித்த விஷயத்தில் மனதைச் செலுத்தி அதைப்பற்றி நிற்கும்படிச் செய்தல். மனனம்—என்பது மனம் பற்றினதைப் பற்று விடாமல் பிடித்து நின்று தைலதாரைபோல் மனமும் விஷயமும் ஒன்றுபட்டுத் தொடர் பிடியாய்த் தொட்டுத் தொடர்ந்து நிற்பது.

குதிரையைப் பழக்கக் கடிவாளமும் லகானு மிருந்தாலும் அதை அவற்றிற்குப் படிந்து நடக்கச்செய்ய சவுக்கும் வேண்டும். அது போலவே கவனம் மனனம் இரண்டும் மனப் பழக்கத்துக் கின்றியமையாத சாதனமாயினும் அச் சாதனம் பயன்படுவதாக 'பிரசனோத்தர ரூப" சம்பாஷணை யென்னும் "சவுக்கு" வேண்டும்.

சவுக்கால் தட்டி குதிரையின் கவனத்தைக் கிளப்பி அதை ஓடவும் நிற்கவும் பழக்குதல் போல, பிரசனோத்தரரூப சம்பாஷணையினால் குழந்தையின் மனதைக் கிளப்பி நினைத்தலும் மறத்தலுமாயிருக்கிற அதன் தொழிலை ஆசான் செலுத்தும் வழியில் முறைப்படி செல்லப் பயிற்றல்வேண்டும்.

* Approved by the Director of Public Instruction; With Hints to Teachers as A Supplement to the Tamil Infant Primer, by the same Author C. L. Society, Madras.

உதாரணம் வேண்டில் சொல்லிக் காட்டுவோம். செப்புவைத்துக்கொண்டு விளையாடிக்கொண்டிருக்கிற குழந்தையின் கவனத்தைப் பற்ற ஆசான் அதை அடித்துப் பிடித்து உட்காரவைத்து இந்தப் பாடத்தைப் படியென்று புஸ்தகத்தைக் கையில் கொடுத்தால் அது பலிக்காது போம். ஆனல் செப்புவைத்து விளையாடுகிற குழந்தையினிடம் "இந்தா அப்புச்சி" யென்று சிறிது வெல்லத்தை அல்லது மிட்டாயைக் கொடுத்து, அந்த மிட்டாயின்மேல் ஈ மொய்க்கிற சமயம் பார்த்து "இதோ பார்த்தாயோ ஈ!" என்று அந்தப் பூச்சியைக் காட்டி "அது என்ன?" வென்று உடனே குழந்தையைக் கேட்டால் "ஈ" என்று சந்தோஷம் பொங்க அது பதில் கூறும். நாவுக்கு உருசி எப்படியோ அப்படியே அறிவானுக்கு அறிவு உருசிகரமாயிருக்கும்.

குழந்தையின் உள்ளறிவைக் கிளப்பிவிட்டால் அது அறிவு தேடி ஆனந்திக்கும்.

குழந்தையின் கவனம் ஈ என்கிற ஜந்துவின் பேரிலிருக்கும்பொழுது அதன் கால்கள், இறக்கை முதலியவற்றைக் காட்டி அவைகளைக் கவனிக்கும்படிச் செய்யவேண்டும். பிறகு பாடப் புஸ்தகத்திலுள்ள ஈயின் படத்தைக் காட்டி ஈ என்கிற ஜந்துவின் உருவத்தை அதன் படத்தில் கண்டுகளிக்கப் பழக்கவேண்டும். பிறகு ஈ என்கிற பொருளைத் தள்ளி அதன் சப்த மாத்திரையான ஈ என்னும் உயிரெழுத்தில் குழந்தையின் மனத்தை நிறுத்தவேண்டும். அப்புறம் அந்த சப்த மாத்திரையின் வடிவத்தை அக்ஷரமாக வரைந்து காட்டவேண்டும். அப்படி வரைந்து காட்டுவதிலும் ஈயின் காலையே உவமானமாகக் கொண்டு சூக்ஷ்ம சப்தமாகிய ஈ என்னும் எண்ணத்திற்கு வர்ணரூபமாயமைந்த அக்ஷரம் அல்லது எழுத்தின் வடிவத்தை இரண்டு கால்களும் மேலே ஒரு கோடும் கீழே அரைக்கோடும் இடையே ஈயின் கண்கள் போல் இரண்டு புள்ளிகள் அதற்குக் கண்களாக அமைந்துள்ளதாயும் சொல்லி "ஈ" என்கிற எண்ணும் எழுத்தும் குழந்தையின் மனக்கண்ணுக்குப் பிரத்தியக்ஷமாகப் படும்படிச் செய்து காட்டவேண்டும். இதற்குச் சாதனங்கள் பல கிண்டர்கார்டன் முறையில் சொல்லப்பட்டிருக்கின்றன. இப்படிப் போதிப்பது அக்ஷராப்பியாசமாம் வித்யாரம்பம் முதல் ஆதிபகவனைக் காட்டும் வரையிலுள்ள "வித்தியாப்பியாச முடிவு" வரையில் உண்மையாக வழங்கும் உபதேசமுறையாம். † இதற்கு "உருக்காட்டி உருமறைத்தல்" என்று சொல்கிறது. "ஈ" என்கிற ஜந்துவின் உருவைக்காட்டி, அந்த ஜந்துவின் உருவை மறைத்து ஈ என்கிற சப்தத்தின் சூக்ஷ்மநாதத்தையும் அதன் ஸ்தூல வடிவாம் எழுத்தையும் காட்டிப் போதிப்பது போலவே குழந்தைமனம் மாருத முமுக்ஷுக்களுக்கு மனோபக்குவமறிந்து குருமூர்த்தமாயவதரித்த பகவான் "ஓம்" என்கிற பீஜாக்ஷரத்தை உபதேசித்து அதன் தேவதா ரூபத்தை (திவ்ய-தேஜோமய-ரூபத்தை)க் காட்டிப் பின்னர் அந்த உருவை மறைத்து அதின் மறைபொருளாயுள்ள தன்னைக் காட்டிக் கடைத்தேறச் செய்வார். இதை யொரு பெரியவர் பூர்வத்தில் குழந்தைகளுக்கும் அவதானமாகும் பாட்டாகக் கற்பித்துள்ளார். அதை மிஸ்ஸஸ் ப்ராண்டர் தயார் செய் கிண்டர்கார்டன் பாடப் புஸ்தகத்தில் சேர்க்கச் செய்தோம். அப்பாட்டு கிண்டர்கார்டன் விளையாட்டு முறைக்கு (Action Song) இசைந்ததாயிருப்பதுபோல இன்னும் எத்தனையோ ஆதிதொட்டு பழக்கத்தில் வழங்கி வந்துள்ளன. இதை இதன்பின் அச்சிட்டிருக்கிறோம். அகாரத்தை பிந்துவின்றி மொண்ணையாக அச்சிட்டுக்காட்டும் புது நாகரிகப் பணம் பெரிதாய்ப் போதிக்கும் முறையினித் தலை காட்டாது மறைந்து போகலாம்போலும், அந்த ஆபாஸ முறை தலை சாய்ந்தொடுங்கவும் கிரமமான வித்யாபோதன முறை தலையெடுக்கவும், அகாரத்தைக்கொன்று

† இதைத்தான் "ஹரி: ஓம்" என்று சொல்லுகிறது.

ஆகாரத்திரிபு காட்டி அக்ஷரத்தை க்ஷரமாகச் செய்யும் ஜாலவித்தை யொடுங்கவும் புதிதாய் "பாலர் பாடம்" ஒன்று அமைத்து அதை அச்சிட்டு வெளிப்படுத்திய பிரதி யொன்று நமது பார்வைக்கு வந்துள்ளதைக் கண்டு களித்து அக்களியாட்டத்தில் இதை யெழுதலானேம். அப்புஸ்தகத்தின் பெயரும் விவரமும் கிரயமும் அடியில் அச்சிடப்பட்டிருக்கின்றன.* அதை ஆக்கியோர் பேர் மிஸ்டர் எஸ். ஜி. டானியல் அவர்கள் பி. ஏ. அவர் தம் முகவுரையில் பின் வருமாறு எழுதியிருக்கிறுர்:—

"தெரிந்தவிஷயங்களைக் கொண்டு தெரியாதவற்றைப் படிப்படியாகப் போதிப்பதே கற்பிக்கும் முறை." முகக் கண்ணுக்குத் தெரிந்தவற்றைக் கொண்டு அக்கண்ணுக்குப் புலப்படாமல் அகக்கண்ணுல் கண்டறியவேண்டியவற்றை படிப்படியாகக் கிரமேணப் போதித்தல் தானே வித்யாப்பியாசமுறை யென்று பொருள் படக்கூறினதாகக் கொண்டு, புறப்பொருள் அகப்பொருள் வேற்றுமை ஒற்றுமைகளை யுள்ளாய்ந்து ஓர்ந்துணர்வார் விவேகிகளாவார். இந்த விவேகமில்லாதவர்கள் முகக்கண் பார்வையைக் கொண்டு மனக்கண் பார்வை விளங்க குழந்தைகளுக்குக் கண் திறக்கப் போதிக்க அருகராகார். இந்த யோக்கியதையுள்ளவர்கள் "கிண்டர்கார்டன் முறை" யென்று பிரசித்திபெற்றதைத் தாமே சுபாவமாக அனுஷ்டிப்பர்.

பின்னுமவர்: "போதிக்கும் விஷயத்தைச் சித்திரம் வரைதல், விதை வைத்தல், குச்சு வைத்தல், களிமண் வேலை முதலிய பல வித தொழில்களோடு சம்பந்தப்படுத்துவதால் பிள்ளைகளுக்கு உற்சாகமும் சந்தோஷமும் உண்டாவதுடன் விஷயமும் அவர்கள் மனதில் ஸ்திரமாய்ப் பதியும் என்பது அனுபவசித்தாந்தம். போதிக்கும் விஷயத்துக்குச் சம்பந்தமில்லாத அனுவசியமான காரியங்களை இடையில் நுழைப்பதால் பிள்ளைகளுடைய கவனம் முக்கியமான விஷயத்திற் செல்லாமல் சிதறிப்போவதற்கிட முண்டாகும் என்பதுவும் வாஸ்தவமே."—என்று உரை யெழுதியிருக்கிறுர்.

இவ்விஷயங்களைக் கவனித்துப் பாலர் வகுப்பு உபாத்திமார்களுக்கும் பிள்ளைகளுக்கும் உபயோகமாக "பாலர் பாடம்" தயார் செய்து, அதற்கு அனுபந்தமாக "உபாத்தியாயர்களுக்குக் குறிப்பு" என்று ஒரு புஸ்தகமும் பிரசுரித்திருக்கிறுர். இவ்விரண்டு புஸ்தகங்களையும் வாங்கி வாசித்துப் பார்த்து அதன் உள்ளுறையான சாதன முறையை உள்ளபடி யறிந்து கைப்பற்றுவோர் நாலுமாசகாலத்தில் பிள்ளைகளுக்கு எழுதப் படிக்கப் போதிக்கலாமென்று ரூபித்துக் காட்டியிருக்கிறுர்.

---

## "ஈ" தன்னையறிந்த கதை.

ஒரு "ஈ" ஒரு அம்மையார் வீட்டுக்குப் பிச்சைக்குச் சென்று "அம்மா பிச்சை!" யென்றது.

அது கேட்டு அந்த அம்மையார் "உன் பேர் என்ன?" என்று கேட்டாள்.

"ஐயோ! என் பேரா! எனக்குத் தெரியவில்லையே, மறந்து போய் விட்டேன் அம்மா!" என்றது அந்த ஈ.

---

* Tamil Infant Primer (பாலர் பாடம்) by S. G. Daniel B. A. (1½ An.) writh Hints to Teachers as A Supplement to the Tamil Infant Primer by the same author (1 அணு) The Christian Literature Society, Madras.

"அப்படியானால் பிச்சையில்லை போ!" என்று அகட்டியோட்டினள் அந்த அம்மையார்!

"அம்மா, அம்மா, பசி துடிக்கிறது! பிச்சை போடவேணும்!" என்று கேட்டது அந்த ஈ.

"உன் பேரென்ன வென்று அறிந்துகொண்டு வந்து சொன்னயானல் பிச்சை போடுகிறேன்" என்று சொன்னள் அம்மையார்.

"ஆனல் சரி!" பென்று அந்த ஈயும் பசி துடித்தாலும் தன் பேரை விசாரித்துக்கொண்டு வந்து சொல்லி பிச்சை வாங்கி யுண்ணலாம் என்று எண்ணி (Hope) சந்தோஷப்பட்டுக்கொண்டு ஆரவாரம் செய்துகொண்டு புறப்பட்டது.

பக்கத்தில் கொழ கொழ வென்று கொழுத்துத் துள்ளிக்கொண்டிருந்த ஒரு இளங்கன்றுக்குட்டியின்மேல் போயுட்கார்ந்து அதன் காதைக் கடித்துக்கொண்டு "கொழ கொழ கன்றே என் பேரென்ன?" என்று கேட்டது.

"அது எனக்குத் தெரியாது என் தாயைக் கேள் போ!" என்று சொல்லிவிட்டு அதைத் தள்ளிக்கொண்டு துள்ளியோடி விட்டது. அந்த ஈ, பாபம்! அதன் தாயைத் தேடிச் சென்று அதையும் அப்படியே கேட்டது.

அதுவும் "எனக்குத் தெரியாது; என்னை மேய்க்கிற ஆயன் அதோ இருக்கிருன். அவனைக் கேள்" என்று ஒரு உதை உதைத்துத் தள்ளிவிட்டது.

இப்படியே அந்த ஈ ஒன்றைவிட்டொன்றைப் பற்றிக் கடைசியாக புலத்தில் மேய்ந்துகொண்டிருக்கிற குதிரை யொன்றை யண்டி அதை "என் பெயர் என்ன?" என்று கேட்க, அது "ஈ-ஹீ-ஹீ-" என்று கனைத்தது. இத்தனை பாடுபட்ட அந்த ஈயும் தன் பேர் ஈ என்று அறிந்துகொண்டு அம்மையாரிடம் சென்று அதை மறக்காமல் தானே ரீங்காரம் போட்டு ஊதிக்கொண்டுபோய்ச்சொல்லிற்று. அவளும் சந்தோஷப்பட்டு வாக்குத்தவருமல் பிச்சை போட்டாள். *ஈயும் அவளிட்ட பிச்சையைக்கொண்டு அதன் ஜன்மம் ஈடேறப் பிழைத்துப் போய்விட்டது என்பது கதை. இந்தக் கதையைப் பின்வரும் பாட்டு நன்ருகச் சொல்கிறது.

கொழ கொழ கன்றே,
கன்றின் தாயே,
தாயை மேய்க்கிற ஆயா,
ஆயன்கைக் கோலே,
கோலையீன்ற கொடிமரமே,
மரத்தின் மேலிருக்கும் கொக்கே,
கொக்கு நீந்தும் குளமே,
குளத்தைக் காக்கும் கரையே,
கரையின் மேலிருக்கும் குசவா,
குசவன் கைச்சட்டி,
சட்டிசெய்யும் மண்ணே,
மண்ணெடுக்கும் பள்ளமே,
பள்ளத்தின்மேல் புல்லே,
புல்லைமேயும் குதிரையே,
என் பேர் என்ன?"—என்றது.

இக் கதையின் விவரத்தை முன்னெருதரம் விவேகசிந்தாமணியில் பிரசுரித்துள்ளோம். அதைப் படித்த குழந்தைகள் இப்பொழுது பெரியவர்களாகி அவர்களுக்குக் குழந்தைகள் பிறந்திருக்குமாதலால் அதையே தேடிப்பார்த்து இக்காலத்துப் பாலர்க்குபயோகமாக மறுபடியும் இன்னெரு சமயம் பிரசுரிப்போம்.

---

* உபதேசமுறையில் மனேபக்குவமறிந்தபின் குருவானவர் அந்த அம்மையாரை "விருத்தாசலத்தம்மை" என்று காட்டி அந்த ஈயும் "சிதாபாஸன்" அன்றி வேறல்லவென்று சொல்லாமற்சொல்லிச் சூசித்துக் காட்டுவரென்று ஸ்வானுபவச் செல்வம் படைத்தோர் சொல்லுவர்.